

# அம்ருதா

## Amrudha Tamil Monthly

Volume 16 Issue 09 April 2022 Rs.25
ஆண்டு 16 இதழ் 09 ஏப்ரல் 2022 ரூ.25

## கடைசி விவசாயி
# கலையியல் முழுமையும் கருத்தியல் குழப்பங்களும்

பிரபு திலக்
அ. ராமசாமி
விஜயானந்த லட்சுமி
அழகியசிங்கர்
எம்.வி. வெங்கட்ராம்
கால சுப்ரமணியம்
ந. பெரியசாமி
ஸிந்துஜா
சு. கஜன்
சௌவி
மணி எம் கே மணி
சந்தியா நடராஜன்
எம்.டி. வாசுதேவன் நாயர்
தி.இரா. மீனா
விட்டல்ராவ்
இந்திரா பார்த்தசாரதி

ஆண்டு 16 இதழ் 9



# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

ஏப்ரல்-2022 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**





**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044-2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf
of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


## இந்த இதழில்...

# மீண்டும் எச்சரிக்கும் காற்று மாசு!

பிரபு திலக்

பூமியில் காற்று மாசு காரணமாக மோசமாக பாதிக்கப்பட்டுள்ள நகரங்களின் பட்டியலை IQAir என்ற நிறுவனம் வெளியிட்டுள்ளது. இதில் முதல் 100 நகரங்களில் இந்தியாவின் 63 நகரங்கள் இடம்பெற்றுள்ளன. முதல் 15இல் 10 இந்திய நகரங்கள். இந்த 10 நகரங்களும் உத்தரபிரதேசம், டெல்லி, பஞ்சாப், ஹரியானா, ராஜஸ்தான் மாநிலங்களைச் சேர்ந்தவை. இந்த பட்டியலில் உலகின் மிகவும் மாசுபட்ட நகரமாக ராஜஸ்தானின் பிவாடி உள்ளது. காசியாபாத் 2ஆவது இடத்தில் உள்ளது. இந்தியாவிலேயே குறைவான காற்று மாசு தமிழகத்தின் அரியலூர் மாவட்டத்தில்தான் பதிவாகியுள்ளது. ஆனால், அதுவும் கூட உலக சுகாதார அமைப்பு பரிந்துரைக்கும் காற்று மாசு அளவைவிட மூன்று மடங்கு அதிகம்.

காற்றில் மிதக்கும் துகள்களைக் கொண்டே காற்றின் தரம் அளவிடப்படுகிறது. 2.5 முதல் 10 மைக்ரோ மீட்டர் வரை விட்டம் கொண்ட துகள்கள் ‘பிஎம் 10’ என்று அழைக்கப்படுகின்றன. 2.5 மைக்ரோ மீட்டருக்கும் குறைவான அளவுகொண்ட துகள்கள் ‘பிஎம் 2.5’ என்று அழைக்கப்படுகின்றன. காற்றில் அனுமதிக்கப்பட்ட துகள்கள் (பிஎம் 10) அளவு 100 மைக்ரோகிராம், நுண் துகள்கள் (பிஎம் 2.5) அளவு 60 மைக்ரோகிராம்.

ஆனால், உலக சுகாதார நிறுவனம் பாதுகாப்பானது என்று பரிந்துரைக்கும் இந்த அளவை விட 9 மடங்கு அதிகமான காற்று மாசு ஒவ்வோர் ஆண்டும் டெல்லியில் பதிவாகிறது. கடந்த ஆண்டு ஜீலை மாதம் சென்னையில் காற்று மாசு அனுமதிக்கப்பட்ட அளவை விட 4 மடங்கு உயர்ந்து இருந்தது குறிப்பிடத்தக்கது. அப்போது, ‘ஆரோக்கிய திறனுக்கான முன்முயற்சி’ என்ற அமைப்பு நடத்திய ஆய்வில் சென்னையில் திரிசூலம், பாரிமுனை, வியாசர்பாடி ஆகிய பகுதிகளில் 176 முதல் 228 மைக்ரோ கிராம் வரை காற்று மாசு பதிவானது. திருவொற்றியூர், காசிமேடு (துறைமுகம் அருகே), துரைப்பாக்கம் (குப்பை கொட்டும் வளாகம் அருகில்), குருவி மேடு (அனல்மின் நிலைய நிலக்கரி சாம்பல் குளம் அருகே), சோழிங்கநல்லூர் (பழைய மகாபலிபுரம் நெடுஞ்சாலை அருகில்), வேளச்சேரி, நொச்சிக்குப்பம், கொடுங்கையூர் (குப்பை கொட்டும் வளாகம் அருகில்), மீஞ்சூர், உர்ணாம்பேடு, சேப்பாக்கம் (நிலக்கரி சாம்பல் குளம் அருகே) பெரும்புதூர், தியாகரயநகர், அத்திப்பேடு, காட்டுக்குப்பம், அம்பத்தூர் ஆகிய இடங்களில் பிஎம் 2.5 மாசு 59 முதல் 128 மைக்ரோகிராமாக இருந்தது.



இந்தியாவில் காற்று மாசுக்கு முக்கியக் காரணமாக வாகனப் புகை, நிலக்கரி மின் நிலையங்கள், தொழிற்சாலை கழிவுகள், பயோமாஸ், கட்டுமானத் தொழில் ஆகியன உள்ளன என்கிறது IQAir ஆய்வறிக்கை. கடந்த ஆண்டு காற்று மாசு காரணமாக டெல்லியைச் சுற்றியுள்ள பல பெரிய மின் உற்பத்தி நிலையங்கள், பல தொழிற்சாலைகள் மூடப்பட்டது குறிப்பிடத்தக்கது.

தமிழ்நாட்டைப் பொறுத்தவரைக்கும் காற்றை மாசுபடுத்துவதில் வாகனப் புகைகளே அதிகப் பங்கு வகிக்கின்றன. ஒருவர், ஒருநாள் 20 சிகரெட்களைப் புகைப்பதால் ஏற்படும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடியது வாகனப் புகை. வாகனங்களிலிருந்து கார்பன் மோனாக்சைடு, ஹைட்ரோ கார்பன், நைட்ரஜன், மீத்தேன், ஆக்சிஜன் உள்ளிட்ட பல வாயுக்கள் வெளியேறுகிறது. நான்கு சக்கரம், இரு சக்கரம் என வாகனத்தின் தன்மைக்கேற்ப ஒவ்வொரு வாகனப் புகையிலும் இவற்றின் அளவு எவ்வளவு இருக்க வேண்டும் என்று, ‘காற்று மாசு தடுப்பு மற்றும் கட்டுப்பாட்டு சட்டம் 1981’ வரையறை செய்துள்ளது. ஆனால், முறையான சோதனை மற்றும் சரியான பராமரிப்பு இல்லாததால் பெரும்பான்மை வாகனங்கள் இச்சட்டம் குறிப்பிடும் அளவைவிட அதிகமான கார்பனை கக்கிக்கொண்டே சுற்றி வருகின்றன. சரக்கு வாகனங்கள், 64 சதவீதம் கார்பன் மோனாக்சைடை

வெளியிட்டுக்காற்றை மாசுபடுத்துதலில் முதலிடத்தில் இருக்கின்றன. மாநகரங்களில் போக்குவரத்து நெரிசல் காரணமாக வாகனங்கள் ஊர்ந்து செல்வதாலும் பயண நேரம் அதிகமாகி, அதிக வாகனப் புகை வெளியாகிறது. தரம் குறைவான பெட்ரோல் / டீசல் மற்றொரு காரணம்.

வாகனப் புகையை அடுத்து நிலக்கரி எரிப்பு, கட்டுமான பணிகள், மழை வீழ்ச்சி உட்படப் பல்வேறு காரணிகளும் காற்று மாசுக்குக் காரணமாக இருக்கின்றன.

காற்று மாசு அப்பகுதியில் வசிப்போருக்கு பல உடல்நலப் பிரச்சினைகளை ஏற்படுத்தக்கூடியது. டெல்லி போன்ற காற்று மாசு அதிகமுள்ள நகரங்களில் வசிக்க நேரும் குழந்தைகள் உடல்பருமன் பிரச்சனைக்கு ஆளாக நேரிடும் என்றும், அவர்களுக்கு ஆஸ்துமா ஏற்படுவதற்கான ஆபத்து அதிகம் என்றும் ஏற்கெனவே ஓர் ஆய்வு வெளியாகியிருந்து குறிப்பிடத்தக்கது. கருவில் இருக்கும் சிசுவையும் காற்று மாசு பாதிக்கும்.

காற்றில் உள்ள நுண்துகள்களினால் குரோமோசோம்கள், மரபணு ஆகியவற்றுக்குப் பாதிப்பு ஏற்படுவதுடன், சுவாசம் மற்றும் இதயம் தொடர்பான நோய்கள் ஏற்படும் அபாயம் உள்ளது. மனித உடலுக்குள் சுவாசம் மூலம் புகும் காற்றில் கலந்துள்ள மாசு, நுரையீரலைக் கடந்து இரத்த ஓட்ட மண்டலத்தை அடைகிறது. இதனால், மாசடைந்த காற்றைச் சுவாசிப்பவர்களுக்கு மூக்கு அரிப்பு, தலைவலி, தொண்டை எரிச்சல், கண் எரிச்சல், தலைமுடி உதிர்தல், தோல் அரிப்பு, வாந்தி, பித்தம் போன்ற சிறிய பாதிப்புகள் தொடங்கி இம்பஸிமா என்ற நுரையீரல் நோய், நுரையீரல் புற்றுநோய், கருத்தரிப்பு கோளாறு, குறைப் பிரசவம், உருக்குலைந்த குழந்தை பிறப்பு, பார்வைக் கோளாறு, மூச்சுப்பிடிப்பு போன்ற பெரிய பாதிப்புகள் வரை பலவிதமான அபாயங்களுக்கு வழிவகுக்கும். குழந்தைகளுக்கு உடல் பருமன் அதிகரிப்பதுடன் வளர்ந்ததும் பரம்பரை அல்லாத சர்க்கரை நோய் ஏற்படும் வாய்ப்பும் உள்ளது.

சென்னையில் மட்டும் கடந்த ஆண்டு (2020) காற்று மாசால் 11 ஆயிரம் பேர் உயிரிழந்துள்ளனர். தமிழ்நாட்டில் இறப்பவர்களில் ஐந்து பேரில் ஒருவர் காற்று மாசால் இறக்கிறார்கள் என்கிறது மற்றொரு ஆய்வு. இந்தியா முழுவதும் அதிக இறப்பை ஏற்படுத்தும் காரணங்களில் ஐந்தாவது இடத்தை காற்று மாசு பிடித்துள்ளது.

காற்று மாசால் அதிகம் பாதிக்கப்படுபவர்கள் சாலைகளை பயன்படுத்துபவர்கள்தான். அதிலும் குறிப்பாக நடந்து செல்பவர்களும் சைக்கிள் ஓட்டிகளும்தான் பெரும்பங்கு பாதிக்கப்படுகிறார்கள். காற்று மாசுக்கு இவர்கள் காரணமில்லை என்பதுதான் இதிலுள்ள பெரும் சோகம்.

2012 ஆம் ஆண்டே, பெர்க்லி பல்கலைக்கழக விஞ்ஞானிகள் நடத்திய ஆய்வின் முடிவில், இந்தியாவில் வாகனப் புகையை அதிகம் சுவாசிக்கும் மக்கள் விகிதத்தில் கொல்கத்தா, டெல்லிக்கு அடுத்தபடியாகச் சென்னையே இருக்கிறது எனச் சொல்லப்பட்டது. சில ஆண்டுகளுக்கு முன்பு பாரதிதாசன் பல்கலைக்கழகம் சென்னையில் அம்பத்தூர், கொளத்தூர், சைதாப்பேட்டை, எழும்பூர் ஆகிய பகுதிகளில் நடத்திய ஆய்வில் புற்றுநோயை ஏற்படுத்தக்கூடிய பாலி சைக்ளிக் அரோமாட்டிக் ஹைட்ரோ கார்பன், பென்சோ பைரீன் ஆகிய இரண்டும் காற்றில் அதிகம் உள்ளது கண்டுபிடிக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது.

சென்னை காற்றில் கலந்திருக்கும் கார்பன் மோனாக்ஸைட், கார்பன் டயாக்ஸைட், பல்வேறு வகை நைட்ரஜன் ஆக்சைட் வாயுக்கள், ஹைட்ரோ கார்பன்கள் போன்ற வாயுக்களுடன் புழுதி, ஈயம் பென்சீன் போன்ற விஷத்தன்மை கொண்ட வேதிப் பொருள்களும் சென்னைவாசிகளுக்கே தெரியாமல் அவர்களைத் தின்று கொண்டிருக்கின்றன என்பதுதான் நிதர்சனம்.

“காற்று மாசடைவதைத் தவிர்க்க, நகரின் மொத்த நிலப்பரப்பில் 33.3 சதவிகிதம் நிலப் பரப்புப் பசுமைப் போர்வையுடன் இருக்க வேண்டும். அதற்கு ஏற்றவாறு அனைத்து மாநிலங்களும் பசுமைப் போர்வையின் அளவை உயர்த்த வேண்டும்” என்று ஒன்றிய சுற்றுச்சூழல் மற்றும் வனத்துறை அமைச்சகம் அறிவுறுத்தியுள்ளது. ஆனால், சென்னையில் கிட்டத்தட்ட 7 சதவிகிதம் மட்டுமே பசுமைப் போர்வை உள்ளது. எனவே, சென்னையின் பசுமைப் போர்வையை அதிகரிக்க வேண்டியது மிக மிக அவசியம்.

இன்றைய வாழ்க்கை முறையில் இது சாத்தியமா என்ற கேள்வி எழலாம். அதற்கு சீனா பதில் சொல்கிறது. IQAir ஆய்வறிக்கையின் படி, சீனாவில் கடந்த 2021இல் இருந்து காற்றின் தரம் அதிகரிக்கத் தொடங்கியுள்ளது. குறிப்பாகத் தலைநகர் பீஜிங்கில் கடந்த 5 ஆண்டுகளாகவே காற்றின் தரம் அதிகரித்துள்ளது. வாகனப் புகையைக் கட்டுப்படுத்தியது, அனல் மின் நிலையங்களின் செயல்பாட்டைக் குறைத்தது ஆகியன முக்கியக் காரணமாகக் கருதப்படுகின்றன.

இந்தியாவைவிட அதிக மக்கள் தொகை கொண்ட சீனாவால் முடியும்போது நம்மால் முடியாதா?

காற்றைத் தூய்மையாக வைத்திருக்க மரங்கள் ஓர் இயற்கைத் தீர்வு. நம்மால் முடிந்த அளவு மரங்கள் நடலாம். குறைந்தபட்சம் வீட்டுக்கு முன்னால் இடம் இருந்தால் ஒரு மரத்தை நட்டு பராமரிக்கலாம்.●

## 'கடைசி விவசாயி'

# கலையியல் முழுமையும் கருத்தியல் குழப்பங்களும்

அ. ராமசாமி

**சாதிகளுக்கிடையேயான முரண்பாடுகளும் ஏற்றத்தாழ்வுகளும் இடப்பெயர்வுகளும் நிகழ்ந்துவிட்ட இன்றைய சூழலில் பழைய கிராம அமைப்பைக்குறித்தமணிகண்டன்பார்வைபுனைவான பார்வையாகவே படுகிறது. உடைமைச் சாதிகளுக்குச் சுரண்டலை உறுதிசெய்த கிராம சமுதாயஅமைப்பைச்சிதைத்தநவீனத்துவவாழ்க்கைஎதிர்மறையானதா? நேர்மறையானதா? என்பது விவாதத்துக்குரிய ஒன்று.**

சினிமா, காட்சி வழியாகப் பார்வையாளர்களோடு தொடர்புகொள்ளும் கலைவடிவம் என்பதை முழுமையாகநம்பிஎடுக்கப்பட்ட தமிழ்சினிமாக்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு. எனது சினிமா 'பார்க்கும்' பழக்கம் தொடங்கிய காலத்திற்குப் பின் எடுக்கப்பட்ட சினிமாக்களிலிருந்து ஒரு பட்டியலைத் தரலாம்:

திரையரங்குகளின் வழியாகப் பார்க்கக் கிடைத்த பாலுமகேந்திராவின் 'அழியாத கோலங்கள்', 'சந்தியா ராகம்', 'வீடு'; மகேந்திரனின் 'உதிரிப்பூக்கள்', 'மெட்டி ஒலி'; பாரதிராஜாவின் 'கல்லுக்குள் ஈரம்', 'அந்திமந்தாரை'; சேதுமாதவனின் 'மறுபக்கம்'; ஸ்ரீதர் ராஜனின் 'கண் சிவந்தால் மண் சிவக்கும்' போன்ற படங்களோடு திரைப்படச் சங்கங்களின் வழியாகப் பார்க்கக் கிடைத்த 'அக்கிரகாரத்தில் கழுதை' (ஜான் ஆப்ரகாம்), 'குடிசை' (ஜெயபாரதி), 'ஏழாவது மனிதன்' (ஹரிஹரன்) முதலான படங்களையும் அந்தப் பட்டியலில் வரிசைப்படுத்தலாம். இந்த வரிசையில் 'கடைசி விவசாயி' (2022) இணைந்துகொள்ளும் சினிமாவாக வந்து சேர்கிறது.



திரையரங்குக்கு வந்து சேரும் திரளான பார்வையாளர்களின் ரசனையை - அனுபவத்தை அறிதலை எதிரும்புதிருமான பாத்திரங்களின் வழியாக வளர்த்தெடுக்கும் நோக்கம் வெகுமக்கள் சினிமாவுக்கு உண்டு. பட்டியலிடப்பட்ட இப்படங்களுக்கு அந்நோக்கம் முதன்மையாக இருந்ததில்லை. அதற்கு மாறாகநடைமுறைவாழ்க்கையின் பொதுமனத்திற்குள் இழையோடிக்கொண்டிருக்கும் கருத்து அல்லது நிலைபாடுகளை விவாதப்படுத்தும் காட்சிகளை அடுக்குதலே இப்படங்களின் உருவாக்கமுறைமையாக - சொல்முறையாக அமைந்திருந்தன. அச்சொல் முறையிலும்கூட ஒவ்வொரு படமும் வேறுபாடுகள் கொண்டனவாக இருந்தன என்பதை இப்படங்களைப் பார்த்தவர்கள் உணர்ந்திருக்கக்கூடும். இனிமேல் பார்த்துக்கூட அந்த வேறுபாடுகளை உணர்ந்துகொள்ளலாம். அந்த வேறுபாடுகள் காரணமாகவே இவை வணிக சினிமாவின் சூத்திரத்திரங்களிலிருந்து விலகிய படங்கள் எனக் கொண்டாடப்பட்டன; விருதுகள் வழங்கிப் பாராட்டப்பட்டன. 'கடைசி விவசாயி'யும் கொண்டாடப்படும்; விருதுகள் பெறும். அதற்கான கலையியல் மற்றும் சிந்தனைத்தளங்கள் படத்தில் உள்ளன.

'கடைசி விவசாயி' படத்தை இயக்கிய எம். மணிகண்டனின் முதல் படம் 'காக்கா முட்டை'



கவனிக்கத்தக்க சினிமாவாகவும் வணிக வெற்றியை ஈட்டிய படமாகவும் அமைந்தது. அதன் சொல்முறை, பார்வையாளர்களுக்குக் கடத்திய உணர்வுக்குவியல் ஆகியவற்றின் வழியே உருவாக்கிய விவாதம் ஆகியவற்றால் கிடைத்த கவனம் மணிகண்டனை முதல் படத்திலேயே வித்தியாசமான இயக்குநராக அடையாளப்படுத்தியது. அப்படத்தைத் தொடர்ந்து அவரது இயக்கத்தில் வந்த 'குற்றமே தண்டனை', 'ஆண்டவன் கட்டளை' ஆகியனவும் சினிமாவின் கலைத்தன்மையையும் சமூகப்பாத்திரத்தையும் உணர்ந்த இயக்குநர் என்பதை உறுதிப்படுத்திய படங்களாகவே இருந்தன.

**மாற்று நோக்கம்**

இரட்டை எதிர்வுக்காட்சி அடுக்குகளால் உருவாக்கப்படும் சொல்முறை வெகுமக்கள் சினிமாவின் ஏற்றுக்கொள்ளப்பட்ட சொல்முறை. மணிகண்டனின் முதல் படமான காக்கா முட்டையில் அவ்வகையான சொல்முறை வழியாகவே படம் நகர்த்தப்பட்டிருந்தது. நகரவாசிகள் என நினைத்துக்கொள்பவர்களின் குற்றவுணர்வைத் தூண்டும் நோக்கம் கொண்ட காக்கா முட்டையில் திட்டமிட்ட செய் நேர்த்தியும் காட்சி ஒழுங்குகளும் எதிரிணையாக அடுக்குவதன் மூலம் உருவாக்கப்பட்டன. விளிம்பில் வாழும் குழந்தைகளுக்கு அன்னியமாகும் உணவுப் பண்டம் என்ற மையத்தை வைத்துக்கொண்டு பெருநகர வாழ்க்கையை விசாரணைக்குட்படுத்திய காக்காமுட்டையின் சொல்முறையைக் 'கடைசி விவசாயி'யில் தவிர்த்திருக்கிறார் மணிகண்டன். அப்படித்தவிர்த்ததின்நோக்கம்என்னவாகஇருக்கும்? உருவாக்கிய விளைவுகள் என்னவாக இருக்கும்? என்பதான கேள்விகளைக் கேட்டுக்கொண்டு தொடர்ந்து விவாதிக்கலாம்.

'கடைசி விவசாயி' படத்தில், 'காக்கா முட்டை' படத்தில் உருவாக்கப்பட்டதை விடவும் கூடுதல் தீவிரத்துடன் விசாரணையொன்றை முன்வைக்க நினைத்துள்ளார் என்பது காட்சியமைப்புகளின் அளவிலும் அவற்றை அடுக்கி நகர்த்துவதிலும் வெளிப்பட்டுள்ளது. காட்சித் துணுக்கு, காட்சி அடுக்கின் நகர்வு என்ற திரைமொழிக் கூறுகளோடு உரையாடல் எழுத்தும் அவற்றைப் பேசவைத்துள்ள தொனியும் இயக்குநர் மணிகண்டனின் திரைமொழிப்புலமையை மேம்பட்ட ஒன்றாகக் காட்டுகின்றன. அவரது மேம்பட்ட புலமைக்குப் பல காட்சிகள் எடுத்துக்காட்டாக இருக்கின்றன. விவசாயியின் வீட்டுச் சூழல், ராமையாவின் வருகையைக் கிராமத்துக்காரர்கள் எதிர்கொள்வதற்கும் விவசாயி எதிர்கொள்வதற்கும் உள்ள வேறுபாடு, யானையைக் கட்டித் தீனிபோடுபவரின் வசனங்கள், நீதிமன்றக் காட்சிகள், நீதிபதியின் கரிசனமான உத்தரவுகள், அவற்றில் ஈடுபாடு காட்டாத விவசாயியின் மனநிலை எனப்பலவற்றை அடுக்கலாம்.

தனித்தனியாக ஒவ்வொரு காட்சியும் அவற்றிற்கேயுரிய முழுமையோடு உருவாக்கப் பட்டுள்ளன. ஆனால், இவற்றையெல்லாம் ஓரிழைக்குள் கவனப்படுத்தும் பின்னணி இசை வேறுவிதமான பயன்பாட்டைக் கொண்டிருக்கிறது. ஒன்றிப்புக்கான இசையைப் பயன்படுத்தியிருந்தால், படத்தின் பார்வையாளர்கள் முழுமையாக அது

உருவாக்கும் துயரமான காட்சிகளோடு இணைந்து தங்களின் அனுதாப உணர்வைக் காட்டிவிட்டு வெளியேறியிருப்பார்கள். அனுதாபத்தோடு கூடிய இரக்கத்தை உருவாக்குவது தனது நோக்கமல்ல; தான் முன்வைக்கும் 'கடைசி விவசாயி'யின் மீது பார்வையாளர்களின் இரக்கம் தேவையில்லை; விவாதங்களோடு கூடிய சிந்தனை உருவாக்கப்பட வேண்டும் என்பது இயக்குநரின் நோக்கம் என்பதால், ஒன்றிப்பு நிலையைத் தவிர்த்து விலகல் நிலையை உருவாக்கும் உத்தியைப் படத்திற்குள் வைத்திருக்கிறார். பின்னணி இசைக்கோர்வைக்குப் பதிலாக, முன்பே அறிமுகமான பாடல்களைக் காட்சிகளில் இணையாக ஓடச் செய்யும்போது பார்வையாளர்கள் ஒன்றிணைவதற்குப் பதிலாக விலகல் நிலையை அடைவார்கள் என்பதை விளக்க வேண்டியதில்லை. அதை ஆங்காங்கே செய்துள்ளார்.

**விலகல் மையங்கள்**

விவாதிக்கப்பட வேண்டிய நிகழ்வு அல்லது கருத்துரு இதுதான் என்பதைத் தெளிவுபடுத்திக் கொண்டு திரைப்படக்கலையின் அடிப்படை மொழிக்கூறுகளான காட்சியின் அளவு, அதற்குள் எழும்பி முடியும் உணர்வெழுச்சி, அதன் வழியாக ஒன்றை முன்வைத்தல், முன்வைத்தலின் தொகுதிகளால் விவாதங்களைத் தூண்டுதல் என்பன சினிமாவின் அழகியல் சார்ந்தவை. 'கடைசி விவசாயி' படம் காட்சிப்படுத்தும் நேரடிக் காலம் மிகக்குறைவானது. ஆனால், நினைக்கப்படும் காலம் மிக நீண்டது. விவசாயி மாயாண்டியின் வாழ்க்கையில் ஒரு ஆறுமாதக் காலத்தை வெட்டியெடுத்து விவாதிக்கும் படம் இன்னும் இரண்டு பாத்திரங்கள் வழியாகப் பல ஆண்டுகளைப் படத்திற்குள் கொண்டுவருகிறது. ஊரைவிட்டுப் போய் நாடோடியாய்த் திரிந்துவிட்டுத் திரும்பும் ராமையாவும் யானைப்பாகனின் வரவும் கிராமத்தின் முந்திய காலங்களைப் பற்றிய நினைவுகளைப் பார்வையாளர்களுக்குள் கொண்டுவந்து சேர்க்கின்றன.

விவசாயத்தோடு உள்ள தொடர்பை விலக்கிக் கொள்ளாத 'கடைசி விவசாயி' மாயாண்டி (நல்லாண்டி), ஏதோவொரு காரணத்தால் கிராமத்தைவிட்டுக் கிளம்பி முருகன் கோவில் தலங்களில் அலைந்துவிட்டுக் கடைசியாகப் பழனியில் காணாமல் போகும் ராமையா (விஜய்சேதுபதி), இனியும் விவசாயியாகத் தொடரமுடியாது எனமுடிவு செய்து, நிலத்தை விற்றுவிட்டு யானை வாங்கி வாழ்க்கையைத் தொடரும் ஒருவரின் யானைப் பாகனாக வரும் இன்னொரு மனிதன் (யோகிபாபு) என மூன்று அடுக்குகளைக் கொண்ட படத்தின் விவாதம் முப்பரிமாண நிலை கொண்டது. படத்தின் கட்டமைப்புக்குள் ஒன்றோடொன்று நெருக்கமான உறவு கொண்ட பாத்திரங்களாக இம்மூன்றும் இல்லையென்றாலும் விவசாயத்தின் இருப்பும் இப்போதைய நிலையும் என்ற புள்ளியில் இணையும் தன்மை கொண்டவை.

தனது நிலம், அதனைக் கிளறி விதை பாவி, நாற்று நட்டு, நீர் பாய்ச்சி, விளைவித்துக் கதிரடித்துப் பலன் பெறும் சுழற்சியைத் தவிர வேறொன்றும் அறியாத மாயாண்டியைப் புரிந்துகொண்ட மனிதன் ராமையா. சொந்த ஊரைவிட்டுக் கிளம்பி நாடோடியாய் அலைந்து திரிந்து ஊர் திரும்பிய ராமையாவிடம் எந்தக் கேள்வியும் கேட்டுக்கொள்ளாமல், அவனது வயிற்றுப் பசிக்குத் தேவை சாப்பாடு என்பது மட்டுமே என்பதைப் புரிந்துகொண்டு அந்நியோன்யம் காட்டும் மாயாண்டி என்ற உறவுக்கு வெளியே இருக்கும் இன்னொரு பாத்திரம் யானைப்பாகன். மாயாண்டியும் ராமையாவும் கிராமத்து வாழ்க்கையின் நம்பிக்கை இழப்பதற்கு ஒரு நூறு காரணங்கள் இருந்தாலும் அவற்றில் ஒன்றுகூட அவர்களுக்குத் தெரியாது. ஆனால், யானை வாங்கிய விவசாயிக்கும் பாகனுக்கும் கிராமத்து வாழ்வுக்கு மாற்று ஒன்றைக் கண்டுபிடித்து தொடரும் அறிவு இருக்கிறது. அந்த அறிவு விவசாயத்தைப் பயனற்ற ஒன்றாக முடிவுசெய்து கைவிட்ட அறிவு. விவசாயத்தை நம்பும் மாயாண்டியையும் விவசாயத்தைக் கைவிட்டுவிட்டு யானை வாங்கி வாழ்க்கையைத் தொடரும் விவசாயியையும் படம் எதிரும் புதிருமாக நிறுத்தியிருக்கலாம். இயக்குநர் அவ்வகையான எதிரிணையைக் கட்டமைக்காமல் இருப்பைக் காட்டிவிட்டு நகர்ந்து கொள்கிறார்.

சிறு விவசாயிகள் நிரம்பிய அச்சு அசலான இந்திய / தமிழ்நாட்டுக் கிராமத்திற்குள் பார்வையாளர்களை அழைத்துச் செல்லும் மணிகண்டன், நவீன விவசாயம் கொண்டு வந்துள்ள நவீன விதைகள், உரங்கள், பூச்சிக்கொல்லிகள் போன்றனவற்றை ஏற்றுக்கொள்ளாத மனநிலை கொண்டவராக மாயாண்டியைக் காட்டுகிறார். தனது தோட்டத்து விவசாயத்திற்கு மின்சாரத்தைப் பயன்படுத்தும் அவர் வீட்டில் மின் விளக்கு, விசிறி போன்றனவற்றைத் தவிர்த்து இயற்கையான காற்று, பழைய உரல், அம்மி, கயிற்றுக்கட்டில் போன்றவற்றோடு வாழ்கிறார். இந்தக் காட்சிப்படுத்தல் வழியாக மரபான விதைகள், தழையுரங்கள், கால்நடை வளர்ப்பு, அவற்றின் சாணியை விவசாயத்திற்குப் பயன்படுத்துதல் என இருந்த மரபு விவசாயத்தை இடம்பெயரச் செய்த, புதுவகை நவீன அறிவியல் சார்ந்த விவசாயத்தின் மீது விமரிசனச் சொல்லாடல்களை உருவாக்கப்போகிறார் என்ற எண்ணம் தோன்றும்போது அதையும் கைவிட்டு விட்டு வேறொன்றுக்குள் நகர்ந்துவிடுகிறார். அந்த நகர்வு அரசமைப்புகளுக்குள் அப்பாவியான கிராமத்து விவசாயிக்குமான முரணாக வடிவம் கொள்கிறது.

தோட்டத்தில் இறந்து கிடைக்கும் மயிலைக் குழிதோண்டிப் புதைத்ததைக் குற்றமாக்கி மாயாண்டியை நீதிமன்றத்தில் நிறுத்தும் காவல் துறையின் செயல்பாடுகள் வழியாக, நம்காலத்து



அரசமைப்புகளைக் கேள்விக்குட்படுத்தும் வாய்ப்புகள் இருந்தபோதிலும் அதிலும் தீவிரம் காட்டவில்லை இயக்குநர். வழக்கைக் கருணையோடு விசாரணை செய்யும் நீதிபதியின் செயல்பாடுகளும் நடைமுறையில் நமது நீதிமன்றங்களின் செயல்பாடுகளுக்கு மாறானவையாக இருக்கின்றன. நீதிபதியின் கட்டளைக்குப் பணிந்து நிற்கும் காவல் துறையைச் சேர்ந்த ஆய்வாளர், தலைமைக்காவலர் போன்றவர்களின் நடவடிக்கைகள் நம்பக்கூடியவை தானா? என்று பார்வையாளர்களிடம் ஐயங்கள் எழுவதைத் தவிர்க்கமுடியாது. தங்களின் அதிகாரம் கேள்விக்குள்ளாக்கப்படும் நிலையில் காவல் துறையினர் பொய்க்குற்றச் சாட்டுகள் மூலம் தங்கள் அதிகாரத்தைக் காட்ட நினைப்பார்கள் என்பதை வெளிப்படுத்தியதைத் தாண்டி அந்தக் காட்சிகள் மூலம் உருவாக்கும் விமரிசனப்பார்வை எதுவும் இல்லை.

**விலகலின் விளைவுகள்**

முரண்களை உருவாக்கி நகர்த்தாமல் அப்படியப்படியே விட்டுவிட்டு விலகியுள்ள மணிகண்டன் படத்திற்குள் உருவாக்கப்பட்டுள்ள பாத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒருவித முழுமையை உருவாக்க நினைத்துள்ளார். ஒவ்வொருவரின் வாழ்க்கைக்கும் பிறரோடு இணைவைத்துப் பார்க்கத் தேவையில்லாத ஒரு முழுமை இருக்கிறது; அதன்படி வாழ்ந்து கொண்டிருந்தார்கள் கிராமத்து மனிதர்கள்; அவ்வாழ்வு இப்போது தொலைந்துவிட்டது என்பதான புலம்பல் நிலையில் உருவாகும் முழுமை அது. அவரது மனநிலையைப் பாத்திரங்களை ஏற்று நடித்த நடிகர்கள் முழுமையாக உள்வாங்கி வெளிப்படுத்தியுள்ளனர். அறியப்பட்ட நடிகர்களான விஜய்சேதுபதியையும் யோகிபாபுவையும் தாண்டிய உடல்மொழியையும் பேச்சுமொழியையும் கிராமத்து மனிதர்கள் தந்துள்ளார்கள். அந்த வகையிலும் இப்படம் குறிப்பிடத்தக்க படமாக ஆகியிருக்கிறது. ஆனால், படம் உருவாக்கும் முழுமை புறநிலை நடப்பைக் கண்டுகொள்ளாத முழுமை என்பதை மட்டும் இங்கே முதல் விமரிசனமாக வைக்கத் தோன்றுகிறது. இதனைத் தொடர்ந்து இன்னும் சில விமரிசனங்களும் உண்டு.

**வரலாற்றில் வைக்கத் தவறுதல்**

சிறு விவசாயிகளைக்கொண்ட இந்தியக்கிராமம் ஒன்றின் கடைசி விவசாயியை வகைமாதிரியாக முன்வைக்க நினைக்கும் ஒரு சினிமா, அதனை வரலாற்றில் வைத்துப் பேசியிருக்க வேண்டும். 1950 கள் தொடங்கி, நவீனப் பொருளாதார உறவுகளை விவாதமின்றி ஏற்றுக்கொண்டார்கள் இந்தியாவின் திட்டமிடல் வல்லுநர்கள். அதனால், இந்தியத் துணைக் கண்டத்தின் அடிப்படை உற்பத்தித் தொழிலாளான வேளாண்மை பாரதூரமான சிக்கலைச் சந்தித்திருக்கிறது. காலனியாதிக்கக் காலம் வரையிலும் கூடப் பெரிய மாற்றங்களைச் சந்திக்காத இந்திய வேளாண்மை, சுதந்திர இந்தியாவின் வேளாண்மைக் கொள்கைகளால் அடைந்துள்ள மாற்றங்கள் முழுமையும் நேர்மறையானவை அல்ல. நவீனக் கருவிகள், நவீன விதைகள், நவீன உரங்கள் முதலியவற்றைப் பரிந்துரை செய்த பசுமைப்புரட்சியின் காரணமாக விளைச்சல்



பன்மடங்காகப் பெருகின என்பதும் இந்திய மக்களின் பசிப்பிணி தீர்க்கும் நிலையை அடைந்தோம் என்பது உண்மைதான். ஆனால், அதன் மறுபக்கமாக இந்தியாவின் விதைகளும் உரங்களும் பயனற்றுப் போயின என்பதும் செயற்கை உரங்களைத் தொடர்ச்சியாகப் பயன்படுத்திய நிலங்கள் மலட்டுத் தன்மையோடு தரிசுகளாகிவிட்டன என்பதும் உண்மை. கிணற்றடி நீராதாரத்தை உறிஞ்சுவதற்குப் போடப்பட்ட மின்சாரப் பம்புசெட்டுகள் புன்செய்த் தோட்டங்களைத் காடுகளாக மாற்றிவிட்டன; ஆற்றுநீர்ப் பாசனங்களில் கூடச் சிறுவிவசாயிகள் தொடர்ந்து வேளாண்மையில் ஈடுபட முடியாமல், நகரங்களுக்கு இடம்பெயர்ந்த வாழ்க்கையைக் கடந்த நாற்பதாண்டுகளாகப் பார்க்கிறோம்; அவற்றைப் பல புனைகதை எழுத்தாளர்கள் எழுதிக்காட்டியுள்ளனர் .

பசுமைப்புரட்சியைத் தொடர்ந்து உலகமயப் பொருளாதாரத்திற்குள் நுழைந்துள்ள இந்திய உற்பத்தி உறவுகள் வேளாண்மையைக் முகவாண்மைக் கட்டமைப்புகொண்ட தொழில்பிரிவுக்குள் (Corporate Industry) நகர்த்த நினைக்கிறது. நாடாளுமன்றத்தில் முன்மொழியப்பட்டு, நிறைவேற்றப்படாமல் நிறுத்திவைக்கப்பட்டுள்ள வேளாண்மைச் சட்டங்களின் நோக்கம் அத்தகையதே. இந்த வரலாற்றுக்குள்ளும் சமகால அரசு அமைப்புகளின் போக்குகள் மீதும் விமரிசனப் பார்வையை உருவாக்கும் வாய்ப்பிருந்தும் படம் அதற்குள் நுழையவில்லை.

**கற்பனையான முடிவு**

கடைசி விவசாயியான மாயாண்டியின் அப்பாவித்தனத்தை முன்வைத்து நடப்பு நிலை மீதொரு கவனக் குவிப்பைச் செய்துள்ள படம் திரும்பவும் அந்தக் கிராமத்திற்கு விவசாயத்தைக் கொண்டுவருவதற்கான வழிமுறையொன்றைச் சொல்கிறது. “பழைய கிராம அமைப்புக்குள் அதன் தேவைகளை அங்கிருக்கும் குழுக்களே தீர்த்துக்கொள்ளும் விதமான ஓர் அமைப்பு இருந்தது. அந்த அமைப்பும் நெருக்கமும் இப்போது காணாமல் போய்விட்டது. அதைத் திரும்பக் கொண்டுவந்துவிட்டால் எல்லாம் சரியாகிவிடும்; திரும்பவும் பழையபடி மாதம் மும்மாரி மொழிந்து வேளாண்மை செழித்துவிடும்” என்பதான கற்பனையொன்றை முன்வைக்கிறது.

நிகழ்காலச் சமூக இருப்பின் பின்னணியில், இதனைக் ‘கற்பனையான புனைவு’ என்று சொன்னாலும் வரலாற்றில் அப்படியான கிராமங்கள் இருந்தன என்பதையும் மறுப்பதற்கில்லை. ஆங்கிலேயர்களின் வருகைக்கு முன்பு, அவற்றின் தேவைகளை அதன் கட்டமைப்புக்குள்ளேயே பூர்த்திசெய்துகொண்ட கிராம அமைப்பைக் கொண்டிருந்தது இந்திய சமுதாயம் என வரலாற்றாசிரியர்களும் சமூகப் பொருளியல் சிந்தனையாளர்களும் குறிப்பிட்டுள்ளனர். ஆசியத்தன்மை கொண்ட கிராமங்களின் கட்டமைப்பைப் பற்றிப் பேசும்போது கார்ல் மார்க்ஸ் கூட இந்தியாவின் அடிப்படைக் கட்டுமானமாக கிராம சமுதாய அமைப்பைக் குறிப்பிடுகிறார். அவ்வமைப்பில், “நிலவுடைமைக் குழுக்களும் கைத் தொழில்குழுக்களும் சேவைப்பணிக் குழுக்களும் இயைந்து வேலைப் பிரிவினை செய்துகொண்டு தங்களின் தேவையைப் பூர்த்திசெய்துகொண்டார்கள்” என்கிறார். இங்கே குறிப்படும் குழுக்கள் என்பன சாதிக் குழுக்கள் தான். அவற்றைப் பிரிட்டானிய அரசாங்கம் பெருமளவு சிதைக்கவில்லை.

விடுதலைக்குப் பிந்திய அரசுகளின் ஐந்தாண்டுத் திட்டங்களின் நடைமுறைகளே அவற்றைச் சிதைத்தன என்பது இந்தியாவின் சமகால வரலாறு. படத்தின் முடிவுக் காட்சியில் கொண்டாட்டமாக எடுக்கப்படும் ‘குலசாமி கும்பிடு’ என்னும் நிகழ்வு பழைய கிராம அமைப்பைக் குறித்த நினைவுத்தூண்டல். மண்பாண்டங்கள் செய்யும் குயவர்களின் உதவியால் செய்யப்படும் புரவிகளும் தெய்வ உருவங்களும் விலகியொதுக்கப்பட்ட சாதிகளிடம் இருக்கும் இசைக்கருவிகளும் வெவ்வேறு அடுக்குகளிடம் இருக்கும் தானியக்குவியல்களும் மலர்க்குவியல்களும் ஒன்றிணைந்து திருவிழாவாக மாறும்போது கொண்டாட்டம் நிகழ்கிறது; மாரியும் பெய்கிறது

இக்காட்சியை முத்தாய்ப்பாக வைத்ததின் மூலம் ‘கடைசி விவசாயி’ படத்தின் இயக்குநர் எம். மணிகண்டன் மரபான கிராம சமுதாய அமைப்பை மிகுந்த நேர்மறையோடு அணுகியுள்ளார். சாதிகளுக்கிடையேயான முரண்பாடுகளும் ஏற்றத்தாழ்வுகளும் இடப்பெயர்வுகளும் நிகழ்ந்துவிட்ட இன்றைய சூழலில் பழைய கிராம அமைப்பைக் குறித்த அவரது பார்வை புனைவான (Romantic Perspective) பார்வையாகவே படுகிறது. உடைமைச் சாதிகளுக்குச் சுரண்டலை உறுதிசெய்த கிராம சமுதாய அமைப்பைச் சிதைத்த நவீனத்துவ வாழ்க்கை எதிர்மறையானதா? நேர்மறையானதா? என்பது விவாதத்துக்குரிய ஒன்று. ●

**“அ. ராமசாமி”** <ramasamytamil@gmail.com>

# விஜயானந்த லட்சுமி கவிதைகள்

**ஓவியம்: ஜெமினி ராய்**

1.
நூறாண்டுகள் வாழ்ந்துகொண்டிருக்கும்
ஆலமரம் குறித்து
வியந்து
பழமையை ஊன்றுகிறார் அவர்

விழுதுகளை முடிச்சிட்டு
ஊஞ்சலாடும் பெண்ணின் கால்கள்
மண்ணில் உந்தி
மேலே மேலே ஆடுகின்றன

குறைந்தபட்சம் அம்மரம்
நூறு முறையாவது
இலைகளைப் புதுப்பித்திருப்பதை
வீழ்ந்துகாட்டுகிறது
ஓரிலை

2.
கிளைவிரித்த மரத்தின் கீழ்
நிழலொதுங்கும் மனிதன்

நிழலை விட்டுத் தலைநீட்டும்
வெயில்படாத செடி

நிழல் மயக்கத்தில்
பூமி

3.
அகழ்ந்து அகழ்ந்து
கொட்டப்பட்ட மண்ணில்
தூர் வாரிய ஆழம்



ஆழத்துக்கும் மண்ணுக்கும்
பொதுவாக நெளிகிறது மண்புழு

இழந்துகொண்டே வரும் வாழ்நாளுக்கும்
இருப்பின் வசத்துக்கும்
பின்னலிடுகிறது
நிறைவேறாததில் கிளைத்த ஒன்று

4.
விலகிய பாதையிலிருந்து
வந்தவன் பாடல்கள் எழுதுகிறான்
வழக்கமான பாதையில் இருந்து
வந்துகொண்டே இருகிறார்கள்
விளக்கங்களோடு

5.
கண்களில் இருந்து
இறக்கி வைக்கிறது பறவை
அலகில் ஓய்வெடுக்கிறது மீன்

6.
கறுத்துக் கொந்தளிக்கிறது மேகம்
மழையாக நிற்கிறது மரம்
உடலாக மட்டும் ஒண்டியிருக்கிறவர்களும்
சிலிர்ப்பதற்கு
நிழலைத் தள்ளுகிறது
குளிர்காற்று

7.
நதியில் வளைகிறது
சரிந்து விலகிய ஒளி

கண்கள் தேடுகின்றன
அசையும் விளக்கினை

நின்று எரிகிறது
உச்சியில் சுடர்

8.
தெப்பக்குளப் படிகளிலிருந்து
மீனுக்குப் பொரி தூவுவதோ
வளைவில் திரும்பும் பேருந்தின்
சன்னல் இருக்கையில்
குழந்தை பார்த்துக் கையசைப்பதோ
எதற்கென்கிறீர்களா?

இறுகியிருக்கும் தீர்மானத்தை
உடைத்துவிடுகிற ஒரு கணம்
விரலசைவில்
ஒட்டிக்கொள்ளக்கூடு மென்றேதான்

9.
இடிந்த சுவர்களில்
இன்னும் இருக்கிறது மேற்கூரை
ஏதோவொரு காற்றுக்கு
ஏதோவொரு மழைக்குக்
காத்திருக்கிறது திறந்தவெளி

10.
முன்னெப்போதோ
நடக்க ஆரம்பித்த ஆறு

அதில்
இன்று பெய்கிறது
புதுமழை

தோள்மேல் கைபோட்டுச் செல்லும்
இருவேறு காலங்கள்
பேசிச் சிரிக்கின்றன
ஒன்றுபோல

11.
அய்யனார் கோயிலில்
காசு வெட்டிப் போட்டிருந்தார்கள்
யாரோ

மாசாணி அம்மனுக்கு
மிளகாயரைத்துப் பூசிவிட்டு வந்தாள்
ஒருத்தி

எல்லையம்மனுக்கு முன்னால்
பாதை விடமுடியாதென்று
ஒரு கூட்டம்

கல்லுக்குள் இருந்தபடி
சாமியாயிருப்பதின் நெருக்கடி
யாருக்குத் தெரிகிறது?

12.
புதிய உறவுகளின் நிறங்களோடு
திரைச்சீலை விரிந்திருக்கிறது

பத்துத் தூரிகைகள் நீள்கின்றன
அவள் கைகளிலிருந்து

ஒளி மறுக்கப்படும்போது
மீண்டும் மீண்டும் அவள் வரைவது
இருளுக்கு முந்தைய
கண்களை

13.
இலைக்குள் இலையைச்
சுருண்டு சுருண்டு உண்ணுகிறது புழு

அதற்குத் தெரியும்
விரியும் வானம்
வளர்சிதை மாற்றத்தோடு
அதன் முதுகில் இருப்பது

புழுவுக்கான தேர்வே
புழுவைக் கடப்பதுதானே?



14.
உற்சாகத்தைத் திருகிக் கண்டடையும்
நடுப்புறத்தில்
மென்சோகப் பாடலைத் தருகிறது
வானொலியின் ஓர் அலைவரிசை

கடந்துவிட முடியாமல்
அதில் உழன்று நனைகிறது மனது

சுகமோ துக்கமோ
அந்தந்த உணர்வை
நகர்த்திவிட்டு அமர்கிறது
எதிர்பாரா ஒருவரின் வரவு

15.
தலையசைக்க
மரமே இல்லாத இடத்தில்
மணலைத் தோளில் அள்ளிக்கொள்கிறது
காற்று ●

**விஜயானந்த லட்சுமி** <vvalakshmi@gmail.com>

## 30 வருட புத்தகக் காட்சி அனுபவம்

# இன்று எத்தனை?

அழகியசிங்கர்

**என்னைப் போன்ற பெரும்பாலாருக்கு இம்மாதிரியான புத்தகக் காட்சி எல்லாம் குடிசைத் தொழில் மாதிரிதான். சில ஸ்டால்களில் கணவன் - மனைவி இருவருமே கடைக்கு வந்து விடுவார்கள். அவர்கள் ஸ்டால்களைப் பார்க்கும்போது எனக்கு நம்பிக்கை வராது. புத்தகக் காட்சிபலரைப்பணக்காரர்களாக்கி அழகு பார்த்திருக்கிறது; அதேபோல் ஒன்றுமில்லாமல் ஏழையாக்கியும் பார்த்திருக்கிறது.**

சமீபத்தில் நடைபெற்ற 45வது சென்னை புத்தகக் காட்சி 2022 பற்றி சில வார்த்தைகள் சொல்ல வேண்டும்.

பொதுவாகப் புத்தகக் காட்சி என்றால் அது ஏற்படுத்தும் கவர்ச்சி வாசகங்களைத்தான் எல்லோரும் கேட்க விரும்புவார்கள். அதனால்தான், “15 லட்சம் வாசகர் வருகை, 15 கோடிக்குப் புத்தகங்கள் விற்பனை” போன்ற வாசகங்களை பபாசி நிர்வாகிகள் தெரிவிக்கின்றார்கள். ஆனால், என்னைப் போன்றவர்களுக்குப் புத்தகக் காட்சி அவ்வளவு எளிதானதன்று. கிட்டத்தட்ட 30 ஆண்டுகளாக நான் புத்தகக் காட்சியில் கலந்துகொண்டு வருகிறேன். இந்த 30 ஆண்டுகளில் பல அனுபவங்கள்.



போன ஆண்டு நான் சென்னை புத்தகக் காட்சியில் கலந்து கொள்ளவில்லை. கோவிட் பயம். அந்தமுறை நான் நினைத்ததுபோல் பலர் பாதிக்கப்பட்டனர். நல்லகாலம் நான் கலந்துகொள்ளவில்லை. இந்த ஆண்டு கோவிட் உக்கிரம் கொஞ்சம் தணிந்துபோனது. அதனால் துணிச்சலாகக் கலந்துகொண்டேன்.

எப்போதும் சிங்கிள் ஸ்டால்தான். கொஞ்சம் கூட மாற்றம் கிடையாது. கொஞ்சம் கூட முன்னேற்றம் கிடையாது. எப்போதும் நண்பர்கள் எந்தப் பலனும் எதிர்பார்க்காமல் உதவி செய்வார்கள்.

இந்தப் புத்தகக் காட்சி மூலம் எனக்கு பண ரீதியாக லாபம் கிடைக்குமா? நிச்சயம் கிடைக்கும். நான் வாங்கும் ஓய்வூதிய பணத்திலிருந்து பாதி கிடைக்கும் அல்லது முழுசா கிடைக்கும்.

இந்த ஆண்டு நான் 10 புத்தகங்கள் புதிதாக கொண்டு வந்தேன். ஆனாலும் எனக்குத் திருப்தி இல்லை. இந்த முறை கடினமான அனுபவமாக இருந்தது. டூ வீலரை ஓட்டிக்கொண்டு நந்தனத்தில் ஒரு திருப்பு திருப்பி புத்தகக் காட்சி சாலைக்குள் நுழையும்போது போதும் போதுமென்று ஆகிவிடும். அதே நேரத்தில் புத்தகக் காட்சி முடிந்து இரவு நேரத்தில் திரும்பும்போது ஜாக்கிரதையாகப் போக வேண்டும். என் பின்னால் விர்விரென்று வேகமாக விரையும் வண்டிகளை நினைத்து நான் கவலைப்படாமலிருக்கமுடியாது. ஆனால், எனக்கு உதவி செய்கிற நண்பர்கள் எந்த முணுமுணுப்பும் முணுக்காமல் ஆர்வத்துடன் கலந்துகொண்டார்கள்.

புத்தகக் காட்சி என்று தொடங்குகிறதோ அன்றுதான் புத்தகக் காட்சிக்குத் தயாராவேன். நான் வீட்டில் பல்லாண்டுகளாக சேர்த்து வைத்திருக்கும் புத்தகங்களை, இரும்பு ரேக்குகளிலிருந்து கீழே இறக்கி வைப்பேன். பின்பு அந்த புத்தகங்களை வீட்டின் மூலையில் அடுக்குவேன். இந்த முறைதான் இப்படிச் செய்தேன். முன்பெல்லாம் சாக்கு

மூட்டைகளில் புத்தகங்களை நிரப்பிக் கட்டி வைப்பேன். டெம்போகாரரைக் கூப்பிட்டு எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போகச்சொல்வேன்.

என் நண்பர்கள் உற்சாகத்துடன் புத்தகங்களை அடுக்கி வைக்க எனக்கு உதவி செய்வார்கள். உண்மையில் அவர்கள்தான் அதில் ஈடுபடுவார்கள். நான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பேன்.

புத்தகம் தயாரிப்பிலிருந்து நான் ஒருவன்தான் எல்லாம். இப்போது எனக்குக் கொஞ்சம் வயது அதிகமாகி விட்டதால் உடல் உபாதைகளும் சேர்ந்து-கொண்டுள்ளன.

யாராவது புத்தகக் காட்சி ஸ்டாலில் தூங்கு-வார்களா? நான் தூங்குவேன். சாதாரண நாட்களில் யாரும் புத்தகங்கள் வாங்கிக்கொண்டு போய்விட மாட்டார்கள். அவ்வளவு காலியாக இருக்கும் என்னுடைய ஸ்டால்.

ஒரு முறை புத்தக காட்சியின் போது எழுத்தாளர் அம்பை என் ஸ்டாலில் மக்கள் நடமாடும் வழியில் நாற்காலியைப் போட்டுக்கொண்டு ஒரு புத்தகத்தை படித்துக்கொண்டிருந்தார். புத்தகம் பார்ப்பதற்கு வருபவர்களுக்கு அது தொந்தரவாக இருந்திருக்கும். ஆனால், அந்தச் சமயத்தில் யாரும் அவரை தொந்தரவு செய்யவில்லை. யாரும் எட்டிப் பார்க்கக்கூட இல்லை என் ஸ்டாலை.

புத்தக ஸ்டாலை முன்னிட்டு நான் நடத்தும் கலாட்டாவை எப்படி விவரிப்பது? என் மனைவி பாவம். ஸ்டாலுக்குக் கிளம்பும்போது ஒரு டிபன் பாக்ஸில் தயிர்ச் சாதம் கட்டித் தருவார். தொட்டுக்கொள்ள நார்த்தங்காய் அல்லது ஊறுகாய். குடிக்க பிளாஸ்கில் வெந்நீர். நான் எப்போதும் தயாராகப் பெரிய பத்மா காபி பையைச் சுமந்துகொண்டு போவேன்.

எத்தனை கனமான புத்தகங்களை எடுத்துக்-கொண்டு போனாலும் பை கிழியாது. அவ்வளவு உறுதி. ஆனால், அந்தப் பையை டூ வீலரில் நான் மாட்டிக்கொண்டு போனால் என் மனைவி பயப்படுவாள். எங்கே பின்னால் வரும் வண்டி தட்டிவிட்டு நான் கீழே விழுந்து விடுவேனோ என்று.

தினம் தினம் நான் அறிவுரை கேட்பதற்குத் தயாராக இருப்பேன். மடிப்பாக்கத்திலிருக்கும் என் பெண்ணிடமிருந்து, அதேபோல் அமெரிக்காவில் இருக்கும் பையனிடமிருந்து அறிவுரைகள் வரும். அடையாற்றில் இருக்கும் என் சகோதரன் கூட, "புத்தகங்களே விற்காது. எதற்கு இதெல்லாம் முயற்சி செய்றே?" என்பான். புத்தங்களைக் குறித்து எந்தக் கருத்தையும் நான் அவனிடம் பேச முடியாது.

புத்தகக் காட்சியில் புத்தகம் விற்பது ஒரு பக்கம் இருந்தாலும், புத்தகம் வாங்குவது இன்னொரு பக்கம் நடந்துகொண்டிருக்கும். நான் புத்தகம் வாங்குவதைப் பார்த்து என் மனைவி பதட்டம் அடைவாள். நான் மனைவிக்குத் தெரியாமல் பல புத்தகங்களை வாங்கி வைத்துவிடுவேன்.

சரி, புத்தகக் காட்சியில் பங்குகொள்வதால் எனக்கு நஷ்டமா லாபமா? நிச்சயம் லாபம்தான். பெரிதாகப் பணம் சம்பாதிக்கவில்லை என்றாலும் நண்பர்களைச் சம்பாதித்திருக்கிறேன்.

அப்பா உயிரோடு இருந்தபோது ஒவ்வொரு நாளும் புத்தகக் காட்சியை விட்டு இரவு வீடு திரும்பும்போது, "இன்று எத்தனை?" என்ற கேள்வியைக் கேட்பார். நான் பதில் சொல்வேன். ஒரு சிறிய நோட்டில் அந்தத் தொகையைக் குறித்துக்கொள்வார். ஒருமுறை அப்பாவைப் புத்தகக் காட்சிக்கே அழைத்துக்கொண்டு வந்துவிட்டேன். அப்போது அவருக்கு 80 வயதுக்கு மேல். (அவர் 96வது வயது நடக்கும்போதுதான் இறந்து போனார்). நான் திரும்பவும் அவரை வீட்டிற்கு அழைத்துப் போவதற்குள் போதும்போதுமென்று ஆகிவிட்டது.

என்னைப் போன்ற பெரும்பாலாருக்கு இம்மாதிரியான புத்தகக் காட்சி எல்லாம் குடிசைத் தொழில் மாதிரிதான். சில ஸ்டால்களில் கணவன் - மனைவி இருவருமே கடைக்கு வந்து விடுவார்கள். அவர்கள் ஸ்டால்களைப் பார்க்கும்போது எனக்கு நம்பிக்கை வராது. புத்தகக் காட்சி பலரைப் பணக்காரர்களாக்கி அழகு பார்த்திருக்கிறது; அதேபோல் ஒன்றுமில்லாமல் ஏழையாக்கியும் பார்த்திருக்கிறது.

நான் நடுத்தரம். எப்போதும் சிங்கிள் ஸ்டால்தான். நண்பர்கள் ஒத்துழைப்பால் அதிகம் செலவு வைக்காமல் போய்க் கொண்டிருக்கிறது. குட்டிக் கூட்டங்கள் நடத்துவது, நண்பர்களுடன் பேசிக்கொண்டிருப்பது, இதெல்லாம் என் ஸ்டாலில் நடக்கும்.

புத்தக கட்சிக்கு வந்து பல இடங்களில் சுற்றிக் கொண்டிருக்கும் எழுத்தாளர்கள் என் ஸ்டாலில் ஓய்வு எடுக்க வந்துவிடுவார்கள். எல்லோரும் உரிமை எடுத்துக்கொள்வார்கள்.

கடந்த 30 ஆண்டுகளாக எழுத்தாளர் எஸ்.ராமகிருஷ்ணனைப் புத்தகக் காட்சியில்தான் சந்திக்கிறேன். அவர் ஒவ்வொரு முறையும் இன்னென்ன புத்தகங்களை வாங்கலாமென்று குறிப்பிடுவார். அதேபோல் வாங்கிக் குவிப்பேன். என் வெளியீடுகள் பற்றியும் அவர் குறிப்பிடாமலிருக்க மாட்டார்.

புத்தகக் காட்சி முன்னிட்டு நான் கவிதைகள் எழுதாமலிருக்க மாட்டேன். இந்த முறையும் எழுதியிருக்கிறேன். ●

**அழகிய சிங்கர்** <navina.virutcham@gmail.com>

# எம்.வி. வெங்கட்ராமின் நெகிடித் தீ

கால சுப்ரமணியம்

**கு.ப.ரா.வின்ஆண்-பெண்உறவுச்சித்திரங்களுக்கும்தி.ஜானகிராமனின் பாலியல்சித்தரிப்புக்கும்கரிச்சான்குஞ்சுவின்காமவியல்சித்தரிப்புக்கும் வெங்கட்ராமன் காம உறவுச் சித்தரிப்புக்கும் மிக மிக வித்தியாசங்கள் உண்டு.**

ராஜமய்யர், அ. மாதவையா, புதுமைப்பித்தன், மௌனி, கு.ப. ராஜகோபாலன், சி.சு. செல்லப்பா, க.நா. சுப்ரமண்யம், தி. ஜானகிராமன், லா.ச. ராமாமிருதம், கு. அழகிரிசாமி, சுந்தர ராமசாமி, கி. ராஜநாராயணன், கிருத்திகா, பிரமிள், ஜெயமோகன், சு. வேணுகோபால் என்ற வகையில் ஒரு புனைகதை எழுத்தாளர் குழு முன்னணியில் வைக்கப்படுவதுண்டு. இவர்களது பெரும்பாலான படைப்புகளை உயர்நிலையில் வைத்து மதிப்பிடுவார்கள்.

நகுலன், ப. சிங்காரம், ஜி. நாகராஜன், சம்பத், தஞ்சை பிரகாஷ், சாரு நிவேதிதா என்ற வரிசையையும் உண்டாக்கலாம். இவர்கள் மீறலும் ஒதுக்குதலும் மிகைப்படுத்தலும் பெற்றவர்கள்.

சங்கரராம், ந. பிச்சமூர்த்தி, ந. சிதம்பர-சுப்ரமணியன், ஆர். ஷண்முகசுந்தரம், ரகுநாதன், ஜெயகாந்தன், கரிச்சான்குஞ்சு, எம்.வி. வெங்கட்ராம், கிருஷ்ணன்நம்பி, நீலபத்மநாபன், அம்பை, அசோகமித்திரன், இந்திரா பார்த்தசாரதி, நாஞ்சில்நாடன், பூமணி, வண்ணதாசன், எஸ். ராமகிருஷ்ணன் என்ற ஒரு நீண்ட வகையினத்தையும் தனிப்படுத்திப் பார்க்கலாம். சில படைப்புகள் வழியாக நினைக்கவும் மதிக்கவும் படுபவர்கள் இவர்கள்.

தி. ஜானகிராமன், கரிச்சான்குஞ்சு, எம்.வி. வெங்கட்ராமன், சாமிநாத ஆத்ரேயன் இவர்கள் குபராவின் பாரம்பரியத்தில் வந்தவர்கள். க.நா.சு, கு. அழகிரிசாமி, ரகுநாதன் இவர்கள் புதுமைப்பித்தன் வழிவருபவர்கள். சிட்டி, செல்லப்பா போன்றோர் வ.ரா. ஸ்கூல்.

எனவே எம்.வி. வெங்கட்ராம், அவரது சில சிறுகதைகளுக்காகவும் ஒருசில நாவல்களுக்காகவும் நினைவுகூரப்படுபவர் என்றும் கு.ப.ரா.வின் வழியில் வந்தவர் என்றும், ஒருவித வகைப்படுத்தலைச் செய்து பார்க்கலாம்.



எம்.வி.வெங்கட்ராம் (1920-2000) தமிழ் இலக்கிய வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க பங்களிப்புகளைச் செய்த எழுத்தாளர். கும்பகோணத்து எழுத்தாளர்களில் ஒருவர். கும்பகோணத்திலேயே வாழ்ந்து, எழுதி, மறைந்தவர். பொருளாதாரத்தில் பி.ஏ. பட்டம் பெற்ற இவர், 1940-46

காலப்பகுதியில் 'கலாமோகினி', 'கிராம ஊழியன்', 'சிவாஜி' ஆகிய இலக்கியப் பத்திரிகைகளில் எழுதி வந்தவர். தம் வாழ்வையும் வருமானத்தையும் ஆகுதியாகப் படைத்து, 1948-ல் தேனீ என்ற இலக்கிய இதழை நடத்தியிருக்கிறார். மிக வசதியான வாழ்க்கையை வாழ்ந்தவர், 1965-1970 காலகட்டத்தில் தனது வியாபார வாழ்க்கைச் சரிவால் பட்டுச்சரிகை வணிகத்தைக் கைவிட்டு எழுதியே பொருளீட்ட வேண்டிய கட்டாயத்துக்கு ஆளாகிறார். (இந்தக் காலத்தில் எழுதியதுதான் 'வேள்வித்தீ' நாவல்). 16-வது வயதில் இவர் எழுதிய 'சிட்டுக்குருவி' என்ற சிறுகதை 'மணிக்கொடி' இதழில் வெளியானது என்பார்கள். 1993ஆம் ஆண்டில் இவர் எழுதிய 'காதுகள்' என்ற நாவலுக்கு சாகித்ய அகாதமி விருது கிடைத்தது. இவரது சிறுகதைகள் முழுத்தொகுப்பாக 'எம்.வி. வெங்கட்ராம் கதைகள்' என்ற பெயரில் தற்போது 'காலச்சுவடு' பதிப்பாக அவரது நெருங்கிய நண்பரும் அபிமானியுமான ரவி சுப்ரமணியத்தால் வெளியிடப்பட்டுள்ளது. நாற்பது பதிப்புகளுக்கும் மேற்பட்டு வந்துள்ள 'நாட்டுக்கு உழைத்த நல்லவர்' என்ற மாணவர்களுக்கான நூல் வரிசையில் 87 நூல்களை பழனியப்பா பிரதர்ஸ் பதிப்பகத்துக்காக கூலிக்காக எழுதியிருக்கிறார். (இது தொடர்பாக ஜெயமோகனின் 'அறம்' கதைத்தொகுதியில் வரும் எழுத்தாளர் இவர்தான்)

'மணிக்கொடி' எழுத்தாளர் என்ற புகழ் - அதன் கடைசிகட்டத்தில் ஒருசில மட்டும் எழுதிய க.நா. சுப்ரமண்யம், தி. ஜானகிராமன், லா.சா. ராமாமிருதம் போன்றவர்களுக்குக் கிடைக்காத பெயர் - இவரது எழுத்தாள நண்பர்களுள் இவருக்கு மட்டுமே உண்டு. இந்தி, ஆங்கிலம் படித்தவர் (சௌராஷ்டிரமும்) என்பதால் மொழிபெயர்ப்புகள் செய்ய வசதி ஏற்பட்டது.

"என் கதைகளில் என்னையே தேடினேன். நான் கேட்டதையும் பார்த்ததையும் பேசியதையும் சுவைத்ததையும் தொட்டதையும் விட்டதையும் அறிந்ததையும் சிந்தை செய்ததையும்தான் எழுதினேன்" என்று கூறியவர் எம்.வி. வெங்கட்ராம்.

'தேனீ'யில் மௌனியின் இரு கதைகளை வெளியிட்டபோதும், 'எழுத்து' இதழில் ஒரு கதை வந்தபோதும், மௌனியின் கதைளுக்குத் தலைப்பும் இலக்கணப் பிழை, எழுத்துப் பிழை, சந்திப்பிழைகளைத் திருத்தியிருக்கலாம். ஆனால், மௌனியின் தனித்தன்மையை அவரால் திருத்தியமைத்திருக்க முடியாது. அதற்கான சில அடிப்படைகள் அவரிடம் போதாது. பயத்துடன்தான் அவரிடம் பழகியுள்ளார். மௌனியை 'எடிட்' செய்தவர் என்ற அவரது தற்பெருமையையும் மௌனியைக் குறைத்து மதிப்பிடும் அளவுக்கான தகுதியையும் வெங்கட்ராமுக்கு அளிக்க முடியாது.

சிறுகதைகளை மட்டும் எழுதாமல் நாவல்களையும் எழுதிப் பெயர்பெற்றவர்களை எந்த முகாந்திரமும் இல்லாமல் இவர் நாவல்களை விட சிறுகதைகளில்தான் சாதனை படைத்திருக்கிறார் என்று சொல்வது நம்மிடமுள்ள ஒரு வழக்கமான பாணி. தி.ஜா., ல.சா.ரா., அசோகமித்திரன், ஜெயகாந்தன், போன்றவர்களை இப்படிக் குறைத்து மதிப்பிடுவார்கள். சிறுகதைகளை மட்டுமே எழுதியவர்கள் இந்தக் கூற்றிலிருந்து நல்லவேளையாகத் தப்பித்திருக்கிறார்கள். சிறுகதைகளில் சாதனை ஏதும் புரியாத ஆர்.ஷண்முகசுந்தரம், க.நா.சு., கிருத்திகா, நகுலன் போன்றவர்களும் தப்பிப் பிழைத்தார்கள். ஒன்றிரண்டு நாவல்கள் எழுதியும் சிறுகதைகளை மட்டுமே உருப்படியாக எழுதிய கு. அழகிரிசாமி போன்றவர்களும் இதிலிருந்த தப்பி நிற்கிறார்கள். ஆனால், நாவல், சிறுகதை இரண்டையும் படைத்தும் அவைகளை மிகமிக உயர்வாகச் சொல்ல முடியாமலும் குறிப்பிடத் தகுந்தவைதாம் என்று தயங்கும் நிலை ஏற்படும் போதும், சிறுகதைகளுக்கே முன்னுரிமை கொடுத்துப் பாராட்டுவார்கள். வெங்கட்ராம் மூன்று குறிப்பிடத்தக்க நாவல்களையும் பத்துக்கு மேற்பட்ட மிகச் சிறந்த சிறுகதைகளையும் எழுதியவர் என்பதால் இவ்விதக் கூற்றுமுறைக்கு இலக்காகலாம்.

'பைத்தியகாரப் பிள்ளை', வியாசர் படைத்த (13) பெண்மணிகளில் 'குந்தி', 'திலோத்தமை', 'மேனகை', 'ஊர்வசி' என்பவை நினைவில் நிற்கும் காத்திரமான சிறுகதைகள். 'நித்தியகன்னி', 'வேள்வித்தீ', 'காதுகள்' ஆகிய மூன்று நாவல்களும் வெங்கட்ராமை நினைவில் நிறுத்துபவை.

'அரும்பு' மிக அதிகப் பக்கங்கள் கொண்ட நாவல். அதற்கு அடுத்து நிறையப் பக்கங்கள் கொண்டது, 'ஒரு பெண் போராடுகிறாள்' நாவல் (தலைப்பே ஒரு மாதிரியாக இருக்கிறதா?). ஆனால், இவை கவனம் பெறத்தக்கவையாய் அமையவில்லை. பக்கக்குறைவான நாவல்களே வெங்கட்ராமின் தனித்தன்மையைக் காட்டுபவையாகின்றன. சிறுகதையாகத் தொடங்கி நாவலாக மாறிய 'நித்யகன்னி' நாவலைத் தயங்காமல் உயர்ந்த படைப்பாக ஒப்புக்கொள்பவர்கள், 'வேள்வித்தீ', 'காதுகள்' என்ற அவரது பிற இரண்டு முக்கியமான நாவல்களைப் பற்றி ஒரேயடியாக உயர்த்திச் சொல்லத் தயங்கி மழுப்புகிறார்கள்.

'நித்யகன்னி' அவரின் உயிர்ப்புள்ள படைப்புக் காலகட்டத்தில் உருவானது. அவரது படைப்பின் உச்சமாக நித்யகன்னியே விளங்கிவருகிறது. இன்றைய பெண்ணிய விமர்சனங்கள் இன்னும் அதன்மேல் எழவில்லை என்பதையும் இங்கு நினைவில் இருத்திக்கொள்ள வேண்டும். அதன்மீது 'மித்திக்கல் ஃபேண்டசி' என்பதற்கான விமர்சனமும் இன்னும் செய்யப்படவில்லை. வெறும் ரசனை விமர்சனம்



மட்டுமே செய்யப்பட்டுள்ளது.

கடைசிக் காலகட்டத்தில் எழுந்ததும் தன் அநுபவம் என்ற அத்திவாரத்தில் நின்றதுமான 'காதுகள்' நாவலின் ஆன்மீகத் தளம் பற்றியும் விமர்சனங்கள் பிறக்கலாம். 'இருளும் ஒளியும்' என்ற நூலில் இடம்பெற்ற 'உயிரின் யாத்திரை', 'இருட்டு' என்ற குறுநாவல்களின் 'அக்கல்ட்' ஆன்மீகத்திலிருந்து 'காதுகள்' வேறுபட்டது. சிறுதெய்வங்கள் என்று தவறாக அழைக்கப்படும் நாட்டுப்புற தெய்வம் ஒன்று, தெருக்கூத்தில் வரும் எல்லாவற்றையும் விமர்சிக்கும் கட்டியங்காரன் (கோமாளி) பாத்திரத்தைப் போன்று இதில் செயல்படுகிறது. சைவத்துடன் தொடர்புடைய சாக்த தெய்வம் எதிர்நிலையில் பொருத்தப்படுகிறது. கருப்போ காளியோ இரண்டும் தாந்திரீகத்துடன் தொடர்புடையவை. கதை நடத்துபவரின் வைணவத் தெய்வம் இராமசாமியாக உதவிக்கு வருகிறது. சைவத்துக்கும் சாக்தத்துக்கும் மகனாகவும் வைணவத்துக்கு மருமகனாகவும் உறவு பெற்ற முருகன், திருவிளையாடல் புரிகிறான். விட்டோடிவிட்டானா மறைந்திருந்து அருள் பாலிக்கிறான தெரியவில்லை. ஒரு விசித்திர அத்வைத நிலை. பக்திமார்க்கமும் பக்திக்கு அளவாக கர்ம மார்க்கம் இருந்தாலும் ஞானமார்க்கம் இங்கே இல்லை. இந்திய ஆன்மீக மரபோ மேலை ஆன்மீக மரபோ தீவிரம் கொள்ளாத ஒரு பக்திச் சரணாகதி நிலை 'காதுகள்' நாவலில் உள்ளது.

'வேள்வித்தீ' நாவல் வெங்கட்ராமின் இரண்டாவது காலகட்டத்தில் எழுந்தது. அவரது சௌராஷ்டிர பிராமண இனத்தின் சரிகைப் பட்டு நெசவு வாழ்வை அடிப்படையாகக் கொண்டது. அவர் சென்னை சென்று முழுநேர எழுத்தாளராகி, பதிப்பகங்களையும் பத்திரிகைகளையும் நாடி, வருமானத்துக்காக ஏராளமாக எழுதிக் குவிக்க ஆரம்பிக்கும் நிலையில் படைக்கப்பட்டது. (அந்தச் சமயத்தில்தான் அவரது பழைய நூல்களும் எழுத்துக்களும் பல பதிப்பகங்களில் மறுபிரசுரம் பெறுகின்றன. ரஜினி பாமிதத்தின் 'இன்றைய இந்தியா' போன்ற முக்கியமான மொழிபெயர்ப்புகளும் வருகின்றன. ஆரம்பத்தில் மூல ஆசிரியரின் பெயரோடு வந்தவை போகப்போக (பதிப்பாளர் நெருக்குதலும் தனது அவசரமும் அவசியமும் காரணமாயிருக்கலாம்) அவரது பெயரிலேயே வருகின்றன. கூலிக்கு மாரடித்தாலும் தன் தரத்தை விட்டுக்கொடுக்கவில்லை என்று அவர் பின்பு சொன்னதை அவரது மொழிபெயர்ப்புகளும் தழுவல் நாவல்களும் சிறுவருக்கான வாழ்க்கை வரலாறுகளும் சரியாக நிரூபிக்கவில்லை என்றாலும், 'வேள்வித்தீ' அந்த விட்டுக்கொடுக்காத தரத்தைப் பேணிக் காத்திருக்கிறது என்றே தெரிகிறது.

அவரது அந்த வறுமைக்காலத் தழுவல் நாவல் படைப்பாக்கங்கள் பற்றி இன்று யாரும் பொருள்படுத்துவதில்லை. அவை பற்றி யாருக்கும் இன்று தெரியாது. அவற்றை நினைவூட்டுவது அநாவசியம் என்றும் நினைக்கிறார்கள். அது சரி என்றும் தோன்றுகிறது. தமிழ் நாவல்களின்

இருண்டகாலமாகவே கருதப்படும் இடைக்காலத்தில் (1940க்கு முன்) மேலைநாட்டு துப்பறியும் மர்ம நாவல்களைத் தழுவி தமிழில் பலர் படைத்திருக்கிறார்கள். பின்பு பெரும் வணிகப் பத்திரிகைகளின் தீனிக்காக ஏராளமான 'ரொமான்ஸ்' வகை சமூகக் கதைகள், வெகுஜனச் சரக்குகள், இறக்குமதி செய்யப்பட்டுள்ளன. பெரும்பாலும் காலத்தோடு காணாமல் போய்விட்டவைதாம் இவ்வகை எழுத்துக்கள். கல்கியோ பின்பு சுஜாதாவோ பத்திரிகைகளுக்காகத் திறத்துடன் செய்ததை, பதிப்பகங்களின் பசிக்காகச் செய்து வெங்கட்ராம் அவைகளைத் தொலைத்தார் எனலாம். ஆனால், அவரைத் தொகுத்தவர்கள் தம் எழுத்துகளையும் நூல்களையும் வெங்கட்ராம் பத்திரமாகப் பாதுகாத்து பட்டியலிட்டு வைத்திருந்ததாகச் சொல்கிறார்கள். நான் அவை வெளிவந்த காலத்தில் பெரும்பாலானவற்றையும் படித்துக் குறித்தும் வைத்திருக்கிறேன். அந்தப் பட்டியலைக் கட்டுரையின் பின் இணைப்பில் காணலாம். அவற்றில் 'ஆண்டவன் வந்தான்' என்ற நாவல் சுவாரசியமாக இருந்த நினைவு இன்னும் உள்ளது. பின்புதான் அது Rider Haggard-ன் She, King Solomon's Mines நாவல்களின் தழுவலாக இருக்கலாம் என் என்ற தெளிவு எட்டியது.

தமிழில் பதிப்புலகில் சாதனைகளைப் படைத்த 'வாசகர்வட்டம்' என்றலஷ்மிகிருஷ்ணமூர்த்தியின் புத்தக சங்கத்தில், ஆண்டுக்குச் சுமார் ஆறு நூல்கள் என்ற திட்டமிட்ட வழிமுறையில், சிட்டி என்ற 'மணிக்கொடி' எழுத்தாளரின் பதிப்பாசிரியத்துவத்தில் புனைகதைகள் (இந்திய,தெலுங்கு,கன்னட, மலையாள மொழிபெயர்ப்புகளும், அக்கரைத்தமிழ் என்றும் தமிழில் புதிதாகப் படைக்கப்பட்டவை என்றும்), கவிதை, பயணம், வாழ்க்கை வரலாறு, அறிவியல், மருத்துவம், விவசாயம், மானுடவியல், அரசியல், தத்துவம் என்று பல துறைகளிலும் தமிழில் இதுவரை இல்லாத விதத்தில் நேர்த்தியான அச்சில் புத்தகங்கள் வெளிவந்தன. அன்று அந்தந்தத் துறைகளில் மிகச் சிறந்தவர்கள் என்று கருதப்பட்டவர்கள் பலரையும் புதியன படைக்கத் தூண்டிக் கெடுவிதித்து, முன்தொகையும் தந்து, திட்டமிட்டபடி கொண்டுவர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

இரண்டாவது ஆண்டிலேயே வெங்கட்ராமின் 'வேள்வித்தீ' அந்த வரிசையில் புதிய நாவலாக வெளிவந்தது. (அதுவரை தொடர்களாக எழுதிவந்த தி.ஜா.வின் புதிய நாவல் 'அம்மா வந்தாள்' புத்தகமாக நேரடியாக வந்தது. லா.ச.ரா. முதல் நாவலான 'புத்ரா', பின்பு 'அபிதா' நாவல்களும் அப்படித்தான் வெளிவந்தன. 'வேரும் விழுதும்', 'சாயாவனம்' போன்ற புதியவர்களின் நாவல்களும் பிரசுரம் பெற்றன.)

அவரது நாவலோடு வெளிவந்த ஆர்.ஷண்முகசுந்தரத்தின் 'மாயத்தாகம்' நாவலும் குறிப்பிடத்தகுந்தது. (ஷண்முகசுந்தரமும் 'மணிக்கொடி' எழுத்தாளர்தான். வருமானத்துக்காக நூற்றுக்கணக்கான நாவல்களை மொழிபெயர்க்கும் தம் இரண்டாவது காலகட்டக் கட்டாயத்துக்கு வந்தவர்தான். ஆனால், அவரது மொழிபெயர்ப்புகள் மூலநூலாசிரியர்களின் பெயர்களுடனேயே வந்தன. இருபதுக்கு மேற்பட்ட நாவல்களை எழுதிய ஷண்முகசுந்தரம் தமது முதல் நாவலான 'நாகம்மாள்' மூலமே அறியப்படுகிறார். க.நா.சு.வின் தமிழின் சிறந்த நாவல் பட்டியலில் இடம்பெற்றது அது. தொடர்ந்து அவரை க.நா.சு. நினைவுபடுத்திக்கொண்டே இருந்தார். வெங்கட்ராமின் நித்யகன்னியை அவர் முக்கிய நாவலாகக் கருதினாலும் நாகம்மாளை 'புரமோட்' செய்ததுபோல் செய்யவில்லை. புதுமைப்பித்தன் ஸ்கூலைச் சேர்ந்த அவர், அதற்கு வெளியில் இருந்த கு.ப.ரா. ஸ்கூலை விமர்சனத்துடன் பார்த்தார் போலும். இத்தனைக்கும் கு.ப.ரா.வை மிக உயர்த்தியும் தி.ஜா.வை தனது பட்டியலில் தொடர்ந்து வைத்திருந்தும் பாராட்டியவர் க.நா.சு.. (அவருடைய ரசனைக்கு வெங்கட்ராம் எழுத்து நிறைந்த திருப்தியைத் தரவில்லை என்றே தெரிகிறது.)

மாயத்தாகமும் ஒரு தறிக்காரன் வாழ்வைச் சொல்வதுதான். (உண்மையில் தனது 'தறிக்காரன்' என்ற சிறுகதையையே நாவலாக்கினார் ஷண்முகசுந்தரம். அவர் கொங்கு நாட்டுக் கவுண்டர்களைப் பற்றி அதிகம் எழுதியவரானாலும், நெசவுத்தொழில் செய்யும் முதலியார் இனத்தில் பிறந்தவர் என்பதால், தன்னுடைய இனவரைவியலை இந்த நாவலில் மட்டுமே ('தனிவழி' என்ற குறுநாவலும் உண்டு) சித்தரித்திருக்கிறார். வழக்கம்போல் நன்றாக ஆரம்பித்து சவிஸ்தாரனமாக விவரித்து திடீரென்று முடித்துவிடும் அவரது பாணி இதிலும் தெரியும். அவரது சிறந்த நாவல் நான்கைந்தில் இது வராது என்றாலும் குறிப்பிடத்தகுந்த நாவல்.

ஒவ்வொரு நாவலையும் ஒவ்வொரு விதத்தில் எழுதும் வெங்கட்ராம், தனது சௌராஷ்டிர பிராமண இன பட்டு சரிகைத் தொழிலை 'வேள்வித்தீ' நாவலில் தான் கதைக்களமாகக் கொள்கிறார். நெசவையும் தறியையும் பற்றி ஷண்முகசுந்தரமும் வெங்கட்ராமும் மட்டும் எழுதவில்லை. பஞ்சுமில் தொழிலாளிகளின் வாழ்க்கைப் போராட்டங்களை முற்போக்குரீதியில் ரகுநாதன் தன் 'பஞ்சும் பசியும்' நாவலில் படைத்திருக்கிறார். கோவை மில் தொழில் பற்றிய சித்திரம் ஷண்முகசுந்தரத்தின் 'தனிவழி' என்ற சிறுநாவலிலும் வருகிறது. நெசவுத்தொழில் ஈடுபட்ட இன்னொரு முக்கியமான பெரும் இனம் தேவாங்கர் குலம். திருப்பூரில் அவர்களின் நெசவுத் தொழில் வளர்ச்சி சர்வதேச அளவில் பெருகியது. (எனக்கு அருகில் இருக்கும் அந்தியூர் தவிட்டுப்பாளையத்தில் தேவங்கச் செட்டியார் இனத்துத் தறித் தொழில் நிலையை நேரில் அறியும் சந்தர்ப்பம் எனக்கிருந்தது.). திருப்பூர் எழுத்தாளரான அந்த இனத்தில் பிறந்த

சுப்ரபாரதிமணியன் நெசவுத் தொழிலைப் பற்றி பல நாவல்களில் சித்தரித்திருக்கிறார். அதே ஊரில் பிறந்த எம்.கோபாலகிருஷ்ணனும் அத்தொழில் பற்றி நாவலும் சிறுகதைகளும் எழுதியிருக்கிறார். (காலச்சுவடு வெளியிட்ட 'வேள்வித்தீ' பதிப்பில் எம்.கோபாலகிருஷ்ணன்தான் அறிமுக முன்னுரை எழுதியிருப்பதையும் இங்கு சுட்டிக்காட்டலாம். ஆய்வறிஞர் கோவைக்கிழார், பிரபல வெகுஜன எழுத்தாளர் ராஜேஷ்குமார், 'எழுத்து' பத்திரிகைக் காலக் கவிஞர் சி.மணி, தத்துவ அறிஞர் சேலம் ஆர்.குப்புசாமி என்று நமக்குத் தெரிந்த எழுத்தாளர்களும்தேவங்கர் குலம்சேர்ந்தவர்கள்தாம்).

நெசவுத் தொழில் என்ற முறையில் இணைந்து தெரியும் இந்த இனங்கள், பண்பாட்டுச் சூழலில் வேறுபட்டவைதாம். எனவே, இந்த இனவரைவியல் கூறுகள் தனித்தனியாகவும் ஒட்டுமொத்த மனித உணர்வுகள் ஒன்றாகவும் படைப்பாளியின் தனித்தன்மைகளால்வேற்று அமைப்பாக்கம்பெற்றும் புலப்படலாம்.

நான் இங்கு 'வேள்வித்தீ' நாவலின் கதைச்சுருக்கத்தைச் சொல்லப்போவதில்லை. "திருமண பந்தத்தை மீறி, ஆணும் பெண்ணும் உடலுறவு கொள்வது பாவம் என்கிறார்கள். ஆனால், இந்த மாதிரி உடலுறவு, சோகத்தைச் சுகமாக்கும் சாதனமாகச் சிலருக்கு, பெண் - ஆண் இருபாலாருக்கும் உதவுகிறது என்பதை 'வேள்வித்தீ' என்ற என் நாவலில் சுட்டிக்காட்டினேன். பட்டு நெசவாளர்களின் வாழ்க்கையை இந்த நாவல் வருணிக்கிறது. கல்வியறிவு உள்ளவர்களுக்கு விதிக்கப்படும் ஒழுக்கக் கட்டுப்பாடு, அறியாமை வயப்பட்ட மக்களுக்குப் பொருந்தாது என்பதையும் இந்த நாவல் வலியுறுத்துகிறது" என்று கூறியுள்ளார் வெங்கட்ராம். இது சரியான கதைக் கள விளக்கமாகத் தெரியவில்லை. வாசகன் தனக்கேற்ப பல விதங்களில் இந்தக் கதையைப் புரிந்துகொள்வான்.

கு.ப.ரா.வின் ஆண் - பெண் உறவுச் சித்திரங்களுக்கும் தி.ஜானகிராமனின் பாலியல் சித்தரிப்புக்கும் கரிச்சான்குஞ்சுவின் காமவியல் சித்தரிப்புக்கும் வெங்கட்ராமன் காம உறவுச் சித்தரிப்புக்கும் மிக மிக வித்தியாசங்கள் உண்டு.

'வேள்வித்தீ' என்று ஏன் இந்த நாவலுக்குப் பெயரிட்டார்? வேதகாலத்து வேள்வித்தீக்கும் பாரதியில் ஏறும் வேள்வித்தீக்கும் இதற்கும் தொடர்புண்டோ? வாழ்க்கை வேள்வியின் தீயா? காமத்தின் தீயா? மோகத்தின் முள் இங்கு வேள்வியின் தீ என்று மாறாட்டம் செய்யப்படுகிறதோ? எவை இந்தத் தீயில் ஆகுதியாகப் படைக்கப்படுகின்றன? அவிர்ப்பாகமான என்ன திரண்டெழுகிறது? ஷண்முகசுந்தரம் இதே போன்ற ஒரு இனவியல் கதைக்கு 'மாயத்தாகம்' என்ற 'அப்ஸ்ட்ராக்ட்' ஆன ஒரு தலைப்பை வைத்திருக்கும்போது, வெங்கட்ராம் ஏன் வைதீகமான தலைப்பைத் தேர்ந்தெடுத்தார். அந்தச் சமயத்து வாழ்நிலைகள் அல்லது பாத்திர வளர்ச்சியின் வாழ்நிலைகள் ஆசிரியர்களின் மனநிலையில் பதிந்து வெளிப்பட்டுள்ளனவோ? (இருவரின் வாழ்க்கைப் பார்வையும் படைப்பு நோக்கமும் வேறுவேறு. வெங்கட்ராம் பக்திமார்க்க ஆன்மீகவாதி. எனவே நம்பிக்கைவாதி. அவ்வளவு வாழ்வுத் திணறலிலும் சிரிக்க முடிந்தவர். கடைசிவிரை முகத்தில் அந்தப் புன்னகையை வைத்திருந்தவர். ஷண்முகசுந்தரத்திடம் ஆன்மீக விஷயம் துளியும் கிடையாது. பச்சை எதார்த்தவாதி. எனவே அவநம்பிக்கைவாதியாகவும் இருந்திருக்கிறார். கடைசிகாலத்தின் விரக்தி வாழ்க்கை அவருக்கு விதிக்கப்பட்டிருந்தது.) 'வேள்வித்தீ' என்றும் 'மாயத்தாகம்' என்றும் தலைப்புகளைத் தேர்ந்தெடுக்கத் தூண்டியவை என்னவிதம்? வியாசர் படைத்த பெண்களின் தொன்மத்தை நிகழ்கால நடப்பில் வேள்வித்தீயில் வரும் இரு பெண்களான கௌசலை, ஹேமா மூலம் பரிசீலித்தாரா வெங்கட்ராம்?

வெங்கட்ராம் 'வேள்வித்தீ' கதையைச் சரியான இடத்தில் சரியாகத் தொடங்கி நிறுத்திவிட்டு, பின்னோக்கித் தாவி முன் நடந்த சம்பவங்களை முதலில் கட்டுரையாகவும் (மூன்றாவது அத்தியாயம் சரியான கட்டுரையேதான்) பிறகு வாய்மொழிக் கதையாடலாகவும் சொல்லி நூலின் முக்கால் பங்கில் தான் மீண்டும் விட்ட கதைக்கு வருகிறார். ('காதுகள்' நாவலிலும் இதுதான் நடக்கும். ஷண்முகசுந்தரத்தின் மாயத்தாகத்திலும் இது சற்று யாந்திரீகமாகவே நீளும்.). இந்த பிளாஷ்பேக்கை சம்பவங்களாகச் சித்தரித்துக் காட்டியிருந்தால் நன்றாயிருந்திருக்கும். என்றாலும் கதையாடல் போகப்போக சம்பவங்களாக மாறுகின்றன என்பது ஒரு நிறைவு. ஒரு மழையில் தொடங்கி ஒரு மழையில் முடிகிறது கதை.

மழை ஒரு குறியீடாகவே மாறுகிறது. எனவே, கதை மூன்றாவது பாராவில் தொடங்கினாலும் அதற்கு முன் மழையின் பாயிரம் அமைகிறது. மழையின் சேதத்திலும் கண்ணனின் காமம் வழிகிறது. உடல்கட்டும் உடல்வனப்பும் சொந்தத் தறியும் சொந்த வீடும் உள்ளவன். கௌசலை என்ற குடும்பப் பாங்கான மனைவி. (ராமனின் அன்னை கோசலை பெயரை ஏன் இங்கே கோபியர் கொஞ்சும் கண்ணன் மனைவிக்கு வைத்தார்?) இரண்டாவது அத்தியாயத்திலேயே தறிக்காரன் வீட்டில் 'தறிகெட்டவளான' ஹேமா நுழைந்துவிடுகிறாள். (ஹேமா என்றால் பொன்னிறத்தாள், அழகியவள் என்று பொருள்). 'சாக்கடையும் நாற்றமுமா நுழைந்து' விடுகிறது? கண்ணனுக்கு இருவருமே வேறுவேறுவிதத்தில் பெண் பிசாசுகளாகத்தான் தோன்றுகிறார்கள்.

இதே போலத்தான் கதையை திடீரென்று முடித்துக் கடையைக் கட்டுகிறார் ஆசிரியர். கௌசலையைக் குழந்தையுடன் குளத்தில்

தற்கொலை செய்துகொள்ளவைத்து ஹேமாவின் இணைவுடன் கதையைச் சுபமாக முடித்துவிடுகிறார். அவ்வளவு எளிதாகத் தற்கொலை செய்துகொண்டு தப்பிப்பவளாக கௌசலையின் பாத்திர வார்ப்பு உருவாக்கப்படவில்லை. இரு பெண்களுக்கான வாழ்விடையில் ஏற்படும் உறவு மோதல்களையும் கண்ணனின் தவிப்பையும் எதிர்பார்த்த வாசகருக்கு ஆசிரியர் தீனி தரவில்லை. இனித்தான் கதையே ஆரம்பிக்கப்போகிறது என்று சுறுசுறுப்படையும் நேரத்தில் பொக்கென்று அணைத்துவிடுகிறார்.

இவையெல்லாம் 'வேள்வித்தீ' நாவலை முழுமையான நாவலாகக் கருத வைக்காமல் தடுப்பவை. ஆனால், கிடைத்தவரை லாபம் என்று வாசகன் திருப்திப்பட வேண்டியதுதான்.

பின்குறிப்பு:

நெகிடித்தீ என்பது, குளிர்நாடுகளில் வீடுகளில் முன்பு வைக்கப்பட்டிருந்த கணப்பு அடுப்பில் அளவாகக் கனன்று எரியும் நெருப்பைக் குறிப்பது. பள்ளிப் பருவத்தில் வாசித்த, ஆரணி குப்புசாமி முதலியாரின் தழுவல் துப்பறியும் மர்ம நாவல் ஒன்றில் கண்டு, மனதில் பதிந்திருந்த சொல்.

### எம்.வி. வெங்கட்ராம் நூல்கள்

### சிறுகதைத் தொகுதிகள்

1. குமாரி, அப்பர் புத்தக நிலையம், தெற்குராஜவீதி, தஞ்சாவூர்.
2. குயிலி, பாரிமகள் நிலையம், 1964.
3. வரவும் செலவும், மல்லிகை பதிப்பகம், 1964.
4. மாளிகை வாசம், கலைஞன் பதிப்பகம், 1964.

55 மோஹினி, குயிலன் பதிப்பகம். 1965.

6. வியாசர் படைத்த பெண்மணிகள், தமிழ்ப் புத்தகாலயம், 1966.
7. அகலிகை முதலிய அழகிகள், வானதி பதிப்பகம்,1969.
8. உறங்காத கண்கள், கலைஞன் பதிப்பகம், 1968.
9. இனி புதிதாய், சிலிக்குயில், 1992.
10. எம்.வி. வெங்கட்ராம் சிறுகதைகள், கண்மணி கிரியேட்டிவ் வேவ்ஸ், 1992.
11. முத்துக்கள் பத்து, அம்ருதா பதிப்பகம், 2007.
12. பனிமுடி மீது கண்ணகி, காலச்சுவடு.

### நாவல்கள்

1. உயிரின் யாத்திரை, 1955.
2. இருட்டு, 1966.
3. இருளும் ஒளியும், மங்கள நூலகம், 1975.
4. அரும்பு, தமிழ்ப் புத்தகாலயம், 1965 & மணிவாசகர் நூலகம் 1977. (700 பக்கம்)
5. நித்யகன்னி, இமயம் பதிப்பகம் (மணியம் அட்டைப்படம்) & மணிவாசகர் நூலகம்.
6. ஒரு பெண் போராடுகிறாள், மணிவாசகர் நூலகம், 1978. (549 பக்கம்)
7. வேள்வித்தீ, வாசகர் வட்டம், 1966.
8. காதுகள், (பாலம் தொடர்), அன்னம்.
9. நானும் உன்னோடு மற்றும் 6 குறுநாவல்கள்
10. நஞ்சு, ஆனந்த விகடன் தொடர்கதை, 1970

### கட்டுரை தொகுதிகள்

1. என் இலக்கிய நண்பர்கள், சௌத் விஷன் & அழிசி 2021.
2. இந்திராகாந்தி, சுதேசமித்திரன், 1966.

### மொழிபெயர்ப்பு, தழுவல்

1. எல்லோரும் நல்லவரே, யதவேந்த்ர சந்திர, 1963.
2. ஒன்றே குலம் (இந்தி), குருதத், கலைவாணி, 1966.
3. முதலும் முடிவும் (இந்தி), சதுரசேன சாஸ்திரி, வைரம் பதிப்பகம்.
4. அணையாச்சுடர், வைரம் பதிப்பகம், 1967.
5. நாடோடி, அருணோதயம், 1967.
6. அக்கரைப் பச்சை, அருணோதயம், 1968.
7. மணமலர், அருணோதயம், 1968.
8. இரு உள்ளங்கள், அருணோதயம், 1968.
9. பூக்காரி, தேவி நிலையம், 1967.
10. பொழுது புலர்ந்தது, தேவி நிலையம், 1968.
11. நெஞ்சம் மறக்கவில்லை, தேவி நிலையம், 1968.
12. ஆலயதரிசனம், தமிழ்ப் புத்தகாலயம், 1970.

14. ஆண்டவன் வந்தான், குறள் நிலையம், 1974. (324 பக்கம்)

14. இன்றைய இந்தியா ('இந்தியா டுடே'), ரஜினி பாமிதத்.

15. சுல்தானா (இந்தி), எ. ரஜாக், பழனியப்பா பிரதர்ஸ்.
16. சுபத்திரா, ரமேஷ் சந்திர தத், வானதி பதிப்பகம்.
17. மலர்களின் திருவிழா, அலெக்சாண்டர் டூமாஸ், வானதி பதிப்பகம்.
18. மாணிக்கத் தீவு, வானதி பதிப்பகம்.
19. டாக்டர் நிர்மலா.
20. நாட்டுக்கு உழைத்த நல்லவர் வரிசை (87 நூல்கள்), பழனியப்பா பிரதர்ஸ். (34 நூல்கள் இன்றும் 25 பதிப்புகள் கடந்து அச்சில் உள்ளன)
21. நேஷனல் புக் டிரஸ்டுக்காக சுமார் 10 நூல்களை மொழிபெயர்த்திருக்கிறார். ●

**"கால சுப்ரமணியம்"** <kasu.layam@gmail.com>

'நாடகமே உலகம்' தொடர்
அடுத்த இதழில் வெளியாகும்.

# ந.பெரியசாமி கவிதைகள்

1. மன அவசம்

திடும்மென
நடந்துகொண்டிருந்தவனின் முன்
பொற்குவியல்
திசை எட்டும் கண்கள் சுழற்றி
தனதாக்கிக் கொண்டான்
திருடன் திருடன் என்றவாறு
கிளியொன்று பறந்த
குழப்பத்தில்
மகிழ்வு கணம் புதைந்து
முகிழ்ந்தது
ஒரு வீச்சம்.

2. காத்திருப்பு

நழுவிய
கனியின் சுவையை
சொல்வதெப்படி
நடுக்கத்தில் மொழி.

காத்திருப்பேன்
பயிற்சியோடு
மற்றுமொன்று
நழுவிடும் கணத்திற்கு.

3. இறைஞ்சுதல்

தொங்கியபடி
வீட்டின் மீது
கனிந்திருந்தது மதியம்.

இன்னும் கொஞ்சமென
மின்விசிறியிடம்
இறைஞ்சியபடி சிறுமி.

எஞ்சிய
கதைகளை கேட்டேன்
தூங்கும்போது என்றபடி
ஓடிப்போனாள்.



**"ந. பெரியசாமி"** <na.periyasamy@gmail.com>

# ஒரு வழிப் பாதை

ஸிந்துஜா

ஓவியம்: கவுதம் முகர்ஜி

**திருமணமான சில மாதங்களிலேயே ரஞ்சி, “ஆ∴பீஸிலேதான் புலி. ஆத்திலே வெறும் புளிதான்” என்று அவரைக் கிண்டல் பண்ணுவாள். சேதுபதி சிறுவனாக இருந்த காலத்தில் நடந்த மருத்துவக் கூத்துக்கள் இப்போது அவரது நினைவில் சுழன்றன.**

நாலு நாள் முன்பு நடந்தது அவருக்கு ஞாபகம் வந்தது. அதனால்தான் மறுபடியும் சேதுபதியிடம் போய் நிற்க வேண்டுமா என்று பானுமூர்த்தி யோசித்தார்.

சேதுபதி வேறு யாரும் இல்லை. அவருடைய ஒரே பிள்ளை. இப்போதுதான் அலுவலகத்திலிருந்து வந்தான். வந்த கையோடு ‘ரிபப்ளிக் டிவி’ முன்னால் உட்கார்ந்து விட்டான். ‘டிஸ்கஷன்’ என்ற பெயரில் தனி ஆவர்த்தனம் நடத்தும் அர்னாப் கோஸ்வாமியை அவனுக்கு ரொம்பவும் பிடிக்கும். டிவி பார்த்துக்கொண்டே இரவுச் சாப்பாடையும் சாப்பிட்டு முடித்து விடுவான். அதற்குப் பிறகு ஆங்கிலப் படங்கள் காண்பிக்கும் ஏதாவது சேனல் ஒன்றைப் போட்டு விட்டு சோஃபாவில் சாய்ந்துகொண்டே பார்ப்பான். ஆபீஸ் தரும் பகல் நேர அழுத்தத்தைக் குறைக்கத்தான் ராத்திரி பனிரெண்டு மணி வரை இந்தக் கேளிக்கை என்று அவரிடமும் அவன் மனைவி சாந்தியிடமும் அடிக்கடி கூறுவான்.

“இந்தக் கண்ராவி டிவியைப் பாத்தாதான் எனக்கு ரத்த அழுத்தம் ஜாஸ்தியாறது” என்று சாந்தி அவனைச் சீண்டுவாள். ஆனால், அவன் அதற்காகப் பழக்கத்தை மாற்றிக் கொள்ளவில்லை.

இப்போது டிவியில் ஒன்றிக் கிடக்கும் அவனிடம் போய்ச் சொல்ல அவர் விரும்பவில்லை. அன்று மாலையிலிருந்தே மறுபடியும் அவருக்கு மார்பில் லேசான வலியும் எரிச்சலும் இருந்தன. நாலைந்து நாள்களாக விட்டுவிட்டு அவை அவரிடம் வந்துவிட்டுச் செல்லுகின்றன. ஒரு வேண்டாத விருந்தாளியைப்போல. முதல் நாள் அவர் அது ஏதோ வாயுப் பிரச்சனை என்று பெரிதாகப் பொருட்படுத்தாமல், நீரில் ஜீரகத்தைப் போட்டுக் காய்ச்சி ஆற வைத்துக் குடித்தார். கேட்ட மாதிரி இருந்தது. ஆனால், மறுநாள் எவ்வளவு நீர் குடித்தாலும் வலி தலையைக் காட்டுவதை மீண்டும் ஆரம்பித்து விட்டது.



சாந்தி குழந்தையை அழைத்துக்கொண்டு ஜெயநகரில் உள்ள அவள் பிறந்தகத்துக்குப் போயிருந்தாள். ஒரு வாரம் குழந்தைக்கு ஸ்கூல் லீவாக இருக்கிறதே என்று. அவள் போன பின் வீட்டுச் சமையலை அவர்தான் கவனித்துக் கொண்டார். அவர் நன்றாகச் சமைப்பார் என்ற தைரியத்தில்தான், தான் ஜெயநகர் போவதாக அவரிடம் அவள் சொல்லிக்கொண்டு போனாள்.

அவள் வீட்டில் இருக்கும் நாள்களிலும் கூட அவ்வப்போது அவர் தனது ‘கைவரிசையைக்’ காண்பிப்பதுண்டு. ஆனால், சாந்தி போனதற்கு மறுநாள் அலுவலகத்திலிருந்து சீக்கிரம் திரும்பிவிட்ட சேதுபதி ‘வீட்டுச் சாப்பாடு ஒரே போர்; அது தவிர அவர் எதுக்கு சமையக்கட்லே கெடந்து மன்னாடனும்? ராத்திரி ஒட்டல்லேர்ந்து வரவழைக்கறேன்’ என்று பீட்சாவுக்கு ஆர்டர் கொடுத்தான். அவருக்கு அது அவ்வளவாக ஒத்துக்கொள்ளவில்லை. அன்று இரவு சரியாகத் தூங்க முடியவில்லை. மறுநாள் இந்த வலி வந்துவிட்டது. அதனால், அவர் காலையில் பேப்பர் படித்துக் கொண்டிருந்த அவனிடம் தனது உபாதையைப் பற்றிக் கூறினார்.

“எதானும் ஒட்டல்லேர்ந்து பஜ்ஜி கிஜ்ஜின்னு எண்ணெய்க் கண்ராவி எதையாவது வாங்கிச் சாப்பிட்டேளா?” என்று கேட்டான். “அவன்கள் என்ன ஆயில் யூஸ் பண்ணான்களோ?”

“வெளியே இருந்து நான் வாங்கிச் சாப்பிட்டது அந்த பீட்சாக் கண்ராவிதான்” என்றார் அவர்.

அவன் அவரைச் சற்று எரிச்சலுடன் பார்த்தான். ஏதோ அவனே தயாரித்துக் கொடுத்ததை அவர் குற்றம் கண்டு பிடிக்கிறார் என்பது போல.

“எனக்கு ஒண்ணும் பண்ணலையே?” என்றான்.

‘உனக்கும் எனக்கும் ஒரே வயதா?’ என்று நினைத்துக்கொண்டார், கேட்கவில்லை.



அவர் தனது பதிலை எதுவும் சொல்லாமல் ஏற்றுக்கொண்டதைப் பாராட்டுபவனாக, "சரி, நான் ரங்குவுக்குப் போன் பண்ணிக் கேக்கறேன்" என்று பக்கத்திலிருந்த கைபேசியை எடுத்துத் தட்டினான். மறுமுனையில் யாரும் எடுக்கவில்லை போலிருக்கிறது. அணைத்துவிட்டான்.

"குளிக்கப் போயிருப்பானா இருக்கும். வந்ததும் போன் பண்ணுவான். அதுக்குள்ளே நானும் குளிச்சு ரெடி ஆயிடறேன்" என்று எழுந்தான்.

டாக்டர் ரங்கு சேதுபதியின் நண்பனும் கூட. சேதுபதி வயதுக்காரன்தான். சேதுபதி வேலை பார்க்கும் கம்பனிக்கு அவனது சிபாரிசில் ரங்குதான் டாக்டர்.

ரங்குவின் அப்பா கிருஷ்ணனும் டாக்டராக இருந்தார். கிருஷ்ணனை பானுமூர்த்தி அவர் வேலை பார்த்த கம்பனியிலும் அவர் டைரக்டராக இருந்த இன்னும் மூன்று கம்பனிகளிலும் மருத்துவராக நியமித்தார். முக்கால்வாசி நேரம் இவர் வீட்டில் யாருக்காவது உடம்பு சரியில்லை என்றால் கிருஷ்ணனே காரைப் போட்டுக்கொண்டு வந்து வைத்தியம் பார்த்து விட்டுப் போவார்.

ரங்கு அது மாதிரி இதுவரை செய்ததில்லை. காலத்தைப் போல மனிதர்களும் மாறிவிட வேண்டியதுதானே என்று பானுமூர்த்தி நினைத்துக்கொள்வார். இப்போது குடும்பத்தில் யாருக்காவது உடல்நிலை சரியில்லை என்றால் சேதுபதி அவர்களை ரங்குவின் வீட்டுக்குக் கூட்டிக்கொண்டு போய்க் காண்பிப்பான்.

சேதுவுக்கும் தனக்குமாக இட்லியும் பிள்ளைக்கு மாத்திரம் சட்னியும் பானுமூர்த்தி பண்ணி வைத்தார். அவர் தயிரில் இட்லியைத் தொட்டுக்கொண்டு சாப்பிட வேண்டியதுதான். அது சகிக்கப் போறாததாக

இருந்தாலும்.

சேதுபதி குளித்து விட்டு பூஜை அறைக்குள் போய்க் கண்களை மூடிக்கொண்டு ஒன்றரை நிமிஷம் இருந்து விட்டு வெளியே வந்தான். கடவுளுக்கு அவன் கொடுத்திருக்கும் நேரம் அவ்வளவுதான். அவனது அறைக்குள் சென்று அலுவலகம் செல்வதற்கான உடைகளை அணிந்து கொண்டு டைனிங் டேபிள் முன் உட்கார்ந்தான்.

"உடம்பு சரியில்லேங்கிறேள். எதுக்கு இழுத்து விட்டுண்டு சட்னியெல்லாம் பண்ணினேள்? மிளகாய்ப் பொடிதான் இருக்கே" என்றபடி சாப்பிட ஆரம்பித்தான். அப்போது அவன் கைபேசி ஒலித்தது. பேசினான். "எஸ் சார், எஸ் சார், எஸ் சார்' என்பதைத் தவிர வேறு எதுவும் அவன் சொல்லவில்லை. போனைக் கீழே வைத்துவிட்டு அவசர அவசரமாக தட்டிலிருந்த மிச்ச இட்லிகளை முழுங்கினான்.

அவரைப் பார்த்து, "டெல்லிலேர்ந்து டைரக்டர் திடீர்னு வந்திருக்காராம். ஒம்பது மணிக்கு மீட்டிங்காம். இப்பவே எட்டரை ஆயிடுத்து" என்று உட்கார்ந்திருந்த சேரைப் பின்னுக்குத் தள்ளி விட்டு எழுந்து சென்றான். இரண்டு நிமிஷத்தில் கார் கிளம்பிச் செல்லும் ஒலி கேட்டது.

அவர் பெருமூச்சுடன் அவன் செல்வதைப் பார்த்துக்கொண்டு நின்றார். அவன் நின்று அவரிடம் ஒரு வார்த்தை சொல்லிவிட்டுப் போ யிருக்கலாம், மறுபடியும் ரங்குவைத் தொடர்பு கொண்டு பேசுகிறேன் என்று. ஆனால், அவன் கவலை அவனுக்கு. அவனை எப்படிக் குறை சொல்ல முடியும்?

அவர் வயிற்றைக் காலியாகப் போடக் கூடாதே என்று இட்லியைச் சாப்பிட்டார். தண்ணீர் குடித்து முடித்ததும் வயிற்றுள் வலி உருவாவது தெரிந்தது. திடீரென்று அவர் சென்ற முறை சாப்பிட்ட மருந்து நினைவுக்கு வந்தது. அவர் தன்னறைக்குச் சென்று ஷெல்ஃபில் மருந்துச் சீட்டைத் தேடினார். கிடைக்கவில்லை. காற்றில் எங்காவது பறந்து போயிருக்கும். அவர் ஒரு டப்பாவுக்குள் போட்டிருந்த பல்வேறு மருந்துகளை எடுத்துப் பார்த்தார். சென்ற முறை சாப்பிட்ட மருந்து ஒரு மாத்திரை மட்டும் இருந்தது. அவசரத்துக்கு இது போதும் என்று நினைத்து அதைச் சாப்பிட்டார்.

ஹாலில் வந்து உட்கார்ந்து கொண்ட போது அவருக்குத் தன் மனைவியின் நினைவு வந்தது. இங்கே வந்த காரியம் முடிந்துவிட்டது போல எதற்கு அவசரம் அவசரமாக ரஞ்சி மேலே போய்விட்டாள்? இருக்கும் வரை அவள் அவரை எப்படிப் பார்த்துக் கொண்டாள்? இன்று வந்து உட்கார்ந்து கொண்டு அவரைச் சிரமப்படுத்தும் வயிற்றுவலியை அவள் இருந்தால் எப்படிச் சமாளித்திருப்பாள்! சேதுவிடம் முதலில் டாக்டரைப் பார்த்துவிட்டு அல்லது ரங்குவை வரச் சொல்லி விட்டு அப்புறம் நீ ஆஃபீஸ் வேலையைப் போய்க் கவனி என்று உத்தரவிட்டிருப்பாள். அவனும் மூச்சுப்பரியாது கீழ்ப்படிதலுடன் செய்திருப்பான். இன்று கூட அவர் சற்று முன்பு அவனிடம் போய்ச் சொல்ல வேண்டுமா என்று தயங்கித்தானே நின்றார். திருமணமான சில மாதங்களிலேயே ரஞ்சி, "ஆஃபீஸிலேதான் புலி. ஆத்திலே வெறும் புளிதான்" என்று அவரைக் கிண்டல் பண்ணுவாள். சேதுபதி சிறுவனாக இருந்த காலத்தில் நடந்த மருத்துவக் கூத்துக்கள் இப்போது அவரது நினைவில் சுழன்றன.

சிறுவயதிலிருந்தே சேது நோஞ்சானாக இருந்தான். ஊரில் ஒரு மழை பெய்தால் அவனுக்குக் காய்ச்சல் வந்துவிடும். அக்கினி நட்சத்திரம் வருவதற்கு என்று காத்திருந்து அவன் மீது தலைவலி வந்து படையெடுக்கும். அவனுக்கு உடம்புக்கு என்றால் அவர் பயப்படுவதை பார்த்துத் தனக்கும் பயம் வந்துவிடும் போலிருக்கே என்று ரஞ்சி அவரைக் கடிந்துகொள்வாள். பொத்திப் பொத்தித்தான் அவனை வளர்த்தார். ரஞ்சி அவரை அதற்காகத் திட்டுவாள். "நீங்க இப்படி பயப்படறாலேதான் அவனுக்கும் தைரியம் பத்தாம போறாது. ஜுரம் வந்தா ஊரைக் கூட்டணுமா?"

அவள் ஊரைக் கூட்டணுமா என்று கேட்டதில் அர்த்தம் இருந்தது. சேதுவுக்கு மூக்கடைத்தால், அஜீரணம் என்றால், விளையாடும் போது காலில் அடிபட்டுக் கொண்டால், தலை வலித்தால் உடனே டாக்டர் கிருஷ்ணனுக்குப் போன் போய்விடும். அவரும் வந்து பார்த்துவிட்டு ரஞ்சியிடம், "இத பாரும்மா. உனக்குச் சின்னக் குழந்தையை வளக்கறது கூடப் பெரிய பிராப்ளம் இல்லே. இந்த வயசான குழந்தையை வச்சுண்டு எப்படித்தான் சமாளிக்கிறயோ?" என்று சிரிப்பார்.

ஒரு தடவை வந்து சேதுவுக்கு ஜுரத்துக்கு மருந்து கொடுத்துவிட்டு கிருஷ்ணன் வீட்டை விட்டு வெளியே வந்தார். அவரைக் காரில் ஏற்றிவிட பானுமூர்த்தியும் ரஞ்சியும் உடன் வந்தார்கள். அப்போது கிருஷ்ணனின் பார்வை வீட்டின் வெளிப்புறம் இருந்த தோட்டத்தின் மீது படிந்தது. தோட்டத்தின் பின் புறம் இருந்த சிறிய கட்டிடத்தைக் காண்பித்து, "அது என்ன?" என்று கேட்டார்.

"ஏன் உனக்குத்தான் தெரியுமே. கார் ஷெட்டு" என்றார் பானுமூர்த்தி.

"உனக்குத்தான் ஆபீஸிலே கார் குடுக்கறான்னு கார் வாங்க மாட்டேன்னுட்டியே, அப்புறம் கார் ஷெட்டு எதுக்கு? ஒண்ணு பண்ணேன். நானும் மாசத்திலே இருபது நாள் இங்க வந்துண்டு வந்துண்டு போக வேண்டியிருக்கு, பேசாம என் கிளினிக்கை இங்க மாத்திண்டுடறேனே!" என்று சிரித்தார்.

"நன்னா சொல்லுங்கோ டாக்டர்" என்று ரஞ்சி பானுமூர்த்தியை இடித்தாள்.

இன்னொரு நாள் அவர் அலுவலகத்தில் இருந்த போது ரஞ்சியிடமிருந்து போன் வந்தது. "சேதுவுக்கு உடம்பு அனலாக் காயறது. கார்த்தாலே சாதாரணமா விளையாடிண்டுதானே இருந்தான். திடீர்னு இப்போ நூத்தி ரெண்டு காமிக்கிறது. நீங்க உடனே வாங்கோ" என்று பதைபதைத்தாள். சாதாரணமாக அவள் அம்மாதிரி நடந்து கொள்வதில்லை என்பதால் அவருக்கும் பதைபதைப்பு ஏற்பட்டு விட்டது.

"கிருஷ்ணனைக் காண்டாக்ட் பண்ணினாயா?" என்று கேட்டார்.

"ஆத்துலே யாரும் போனை எடுக்கலேன்னு கிளினிக்குக்குப் போன் பண்ணினேன். அவர் ஏதோ கல்யாணத்துக்குப் போயிருக்காராம். சாயங்காலம்தான் வருவார்ங்கறா" என்றாள் ரஞ்சி.

"சரி, நான் பாத்துக்கறேன்" என்று போனைக் கீழே வைத்தார்.

அன்று மத்தியானம் நடக்கவிருந்த போர்டு மீட்டிங்கில் கம்பனியின் தலைமைக் கணக்கு அதிகாரி என்று அவர்தான் கேள்விகளை எதிர்கொள்ள வேண்டும். அச் சமயங்களில் அவரது பாஸ் வெளியிலிருந்து வந்த விருந்தாளி போல நடந்துகொள்வார்.

அவர் நேரே எம்.டி.யின் அறைக்குச் சென்றார். எம்.டி. அவர் பார்த்துக் கொண்டிருந்த அன்றையக் கூட்டத்தின் அஜெண்டா ஃபைலை மூடிவிட்டுப் பானுமூர்த்தியைப் பார்த்தார். பானுமூர்த்தி, "எனக்கு ஆபீஸிலேயே உக்கார முடியலே. டிசன்ட்ரி. மாத்திரை போட்டும் கேக்கலே. என்னாலே ஆபீசில் இருக்க முடியணும்னு தோணலே" என்றார்.

"ஐயோ இன்னிக்கு போர்டு மீட்டிங்காச்சே?"

"சாரி சார்" என்றார் பானுமூர்த்தி. பானுமூர்த்தி இல்லாமல் மீட்டிங்கை நடத்தத் துணிய மாட்டார், எம்.டி.. அவரே மீட்டிங்கைக் கேன்சல் செய்து விடும்படி சொல்லட்டும். பானுமூர்த்தியின் வேலை மீது அவருக்கு அபார நம்பிக்கை உண்டு. இப்போது தனியே டைரக்டர்களைச் சமாளிக்கப் போகமாட்டார்.

"உடம்பு சரியில்லேன்னா என்ன பண்ண முடியும்? இன்னிக்கி மீட்டிங்கைக் கேன்சல் செஞ்சிடுங்க. அந்த மிதுன் சோப்ராதான் கலாட்டா பண்ணுவான். கடன் கொடுத்த பேங்குலேர்ந்து அவனை டைரக்டரா போட்டு அவங்க அனுப்பியிருந்தாலும் அவன் ஏதோ தன்னோட சொந்தக் கைக்காசை எடுத்து நமக்குக் கடன் கொடுத்த மாதிரி பேசுவானே" என்றார் எம்.டி.

"சார், நீங்களே அவர் கிட்டே ஒரு வார்த்தை மீட்டிங் இல்லேன்னு சொல்லிட்டு, மத்தியானமா உள்ளே இருக்கற ரெண்டு ஷிவாஸ் ரீகலை எடுத்து அவருக்கு அனுப்பிச்சிருங்க" என்றார் பானுமூர்த்தி.

"இங்க வரதுக்கு முன்னாலேயே இதையெல்லாம் யோசிச்சு வச்சிகிட்டுதான் வந்தீங்களா?" என்று எம்.டி. சிரித்தார்.

"நான் டாக்டர்ட்ட போயிட்டு அப்படியே வீட்டுக்குப் போயிடுறேன் சார்" என்று பானுமோர்த்தி விடை பெற்றுக்கொண்டார்.

அவர் ஆஃபீஸை விட்டு வெளியே வந்து காரில் ஏறி டிரைவரிடம் கிருஷ்ணனின் கிளினிக்குக்குப் போகச் சொன்னார். வரவேற்பறையில் அவரைப் பார்த்த பெண், "இப்பதான் அம்மா கூட போன் பண்ணினாங்க. டாக்டர் ஒரு கல்யாணத்துக்குப் போயிருக்காருன்னு நான் அவங்ககிட்டே சொன்னேனே" என்றாள்.

"கல்யாணம் எங்கே?" என்று கேட்டார். அவள், ஜெயநகரில் இருந்த குசலாம்பா கல்யாண மண்டபம் என்றாள்.

அவர் டிரைவரிடம் கல்யாண மண்டபத்துக்குக் காரை விடச் சொன்னார். அது பத்து கிலோமீட்டர் தொலைவில் இருந்தது. நல்ல வேளையாக அந்தப் பொழுதில் அவ்வளவாக வாகன நடமாட்டம் சாலையில் காணப்படவில்லை.

அவரைக்கல்யாண மண்டபத்தில் பார்த்த டாக்டர் ஆச்சரியத்துடன், "உமக்கும் நம்ம கிளையண்டைத் தெரியுமா? ரெண்டு பேரும் சொல்லவே இல்லியே? மணி பதினொன்னுதான் ஆறது. ஆனா சாப்பாடு ரெடி இல்லை போட்டாச்சுங்கறா. கார்த்தலையும் நான் ஒண்ணும் சாப்பிட்டலே. பந்திக்கு முந்திக்குவோம், வாரும்" என்றார்.

"கிருஷ்ணன்! நான் உங்களை அழைச்சிண்டு போறதுக்கு வந்திருக்கேன்."

அவர் திகைப்புடன் அவரைப் பார்த்து, "எங்கே?" என்று கேட்டார்.

"குழந்தைக்கு ஒரே ஜுரம். அடிச்சுக் கொல்றது. அதான் ஓடி வந்திருக்கேன்."

கிருஷ்ணன் மறுபடியும் நம்ப முடியாதவர் போல அவரைப் பார்த்தார்.

காரில் போகும் போது, "கிருஷ்ணன் ரொம்ப சாரி. சாப்பிட உக்காரப் போன மனுஷனை இழுத்துண்டு போறேனேன்னு மனசுக்குக் கஷ்டமா இருக்கு" என்றார்.

"ஆமாய்யா. எனக்கும்தான் மனக்கஷ்டமா இருக்கு. உருளைக் கிழங்கு ஓரப்புக் கறி, வெங்காய சாம்பார், மோர்க் குழம்பு, பால் பாயசம், தயிர் வடை, லெமன் ரசம், ஜாங்கிரின்னு எல்லாத்தையும் விட்டுட்டு...." என்று சிரித்தார்.

"நாளைக்கு உமக்கும் மாமிக்கும் நம்பாத்திலேதான் லஞ்ச். நீர் சொன்ன ஐட்டம்ஸ் எல்லாம் ரஞ்சி பண்ணி வச்சிடுவா" என்றார் பானுமூர்த்தி.

அவர்கள் இருவரையும் பார்த்ததும் ரஞ்சிக்கு ஆச்சரியம் தாளவில்லை. கிருஷ்ணன் உள்ளே போய்

சேதுவைப் பார்த்தார். பானுமூர்த்தி டாக்டரைப் போய்ப் பார்த்துக் கூட்டிக்கொண்டு வந்த கதையை ரஞ்சியிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போது கிருஷ்ணன் வந்தார்.

"நான் வந்தது நல்லதாப் போச்சு" என்றபடி பிரிஸ்க்ரிப்ஷன் தாளில் மருந்தை எழுதினார். "எனக்கும் கவலையாதான் இருக்கு."

பானுமூர்த்தி டாக்டரிடம், "ஏன் என்ன ஆச்சு? குழந்தைக்கு ஏதாவது சீரியசா?" என்று படபடத்தார்.

ரஞ்சியைப் பார்த்து கிருஷ்ணன், "சேதுவைப் பத்திக் கவலைப்பட ஒண்ணுமில்லே. இந்தப் பெரிய குழந்தையை நினைச்சாதான் கவலையா இருக்கு" என்று பானுமூர்த்தியைப் பார்த்தார்.

"நன்னா சொல்லுங்கோ. எதுக்கு இவ்வளவு ஆர்ப்பாட்டமெல்லாம் பண்ணனும்? நானே போன் பண்ணியிருக்க மாட்டேன். தைரியத்துக்குக் கூட இருக்கட்டுமேன்னு கூப்பிட்டேன். அதுக்காக இவர் ஆஞ்சநேயர் மலையைத் தூக்கிண்டு வரப் போன மாதிரி பண்ணுவார்னு நினைச்சேன்னா?" என்றாள் ரஞ்சி சற்றுச் சலிப்புடன்.

ரஞ்சியைச் சற்றுக் கோபத்துடன் பார்த்தார் பானுமூர்த்தி. "ஆபீசிலேர்ந்து ஓடி வந்து எல்லாத்தையும் பண்ணினேன் பாரு, உன்கிட்ட வாங்கிக் கட்டிக்கிறதுக்கு. என்னைச் சொல்லணும்."

கிருஷ்ணன் அவரது தோளைத் தட்டி, "எனக்கு உம்ம பதட்டம் புரியறது. ஆனா உம்ம உடம்பையும் நீர் கவனிச்சுக்கணும் இல்லியா? அனாவசியமா நீர் பிபியை ஏத்திண்டு எதுக்குக் கஷ்டப்படணும்?" என்று சமாதானப்படுத்தினார்.

அவர் கைபேசி ஒலித்தது.

"ஹலோ"

"அப்பா. நான் சேது பேசறேன். திடீர்னு எங்க டைரக்டரோட தும்கூர் ஃபாக்டரிக்குப் போகணும். நான் வர லேட் ஆயிடும். எனக்காக நீங்க ராத்திரி எதுவும் பண்ணி வைக்க வேண்டாம். நீங்க டின்னர் சாப்பிட்டுட்டு தூங்கப்போயிடுங்கோ" என்றான் சேது.

அவர், "சரி. நீ ஜாக்கிரதையாப் போயிட்டு வா" என்றார்.

அவன், "போனை வச்சுடட்டா? வேறே ஒண்ணும் இல்லியே?" என்று கேட்டான்.

அவர், "இந்த வயத்துவலி பிடுங்கிண்டு இருக்கு, நான் சாயந்திரமா ரங்குவோட கிளினிக்குக்குப் போறேன். நீ அவன்கிட்டே ஒரு போன் பண்ணிச் சொன்னேன்னா நான் அங்க அனாவசியமா வெயிட் பண்ணிண்டு இருக்க வேண்டாம்" என்றார் அவர்.

"ஓ, அவனும் எனக்கு போன் பண்ணலையே. யூஸ்லஸ் ஃபெல்லோ. சரி நான் கார்லே போகறப்போ அவனுக்குப் போன் பண்ணிச் சொல்லிடறேன். நம்ம டிரைவரும் இப்போ ஆத்துக்கு வந்துடுவான். சாயந்திரம் அவனைக் கூட்டிண்டு போய் டாக்டரைப் பாருங்கோ" என்று சொல்லிவிட்டுப் போனைக் கீழே வைத்துவிட்டான். அவன் குரலும் போனை வைத்துவிட்ட விதமும் அவன் பரபரப்புடன் இருந்ததை அவருக்குச் சுட்டிக் காட்டின.

மாலையில் அவர் ரங்குவின் கிளினிக்குக்குச் சென்றார். வழக்கம் போலக் கூட்டம் கவ்வியிருந்த ஹால் அவரை வரவேற்றது. அவர் ரிஷப்ஷனிஸ்ட்டிடம் தன் பெயரைச் சொல்ல அவள் ஒரு ஸ்லிப்பில் அதை எழுதிக்கொண்டு அவரை உட்காரச் சொன்னாள். டாக்டர் இன்னும் வரவில்லை என்றும் கால்மணியில் வந்து விடுவார் என்றும் சொன்னாள்.

கால்மணியில் ரங்கு வந்து விட்டான். வரும் போதே அவன் ஹாலில் இருந்தவர்களைப் பார்த்துப் புன்னகை செய்தும் கைகூப்பியும் நடந்து சென்றான். அவன் பார்வை அவர் மேல் விழுந்ததும் சட்டென்று நின்றான். அவரருகே வந்து கையைப் பிடித்துக்கொண்டு தன்னறைக்குச் சென்றான்.

"ஐம் சாரி, ரொம்ப நேரமா வெயிட் பண்றேளா? நான் இன்னிக்கு என் மச்சினராத்து கிருகப்பிரவேசம்ன்னு கார்த்தாலே போயிட்டு மத்தியானம் லஞ்சுக்கு மேலேதான் ஆத்துக்கே வந்தேன். தொந்தரவா இருக்குமேன்னு மொபைலைக் கூட நான் எடுத்துண்டு போகலே. சேது உங்களை ஆத்துக்கு அழைச்சுண்டு வந்திருக்கலாமே?" என்றான்.

ரங்குவிடம் சேது பேசவில்லை என்று பானுமூர்த்திக்குத் தெரிந்தது.

"இல்லே, அவன் ஆபிஸ் விஷயமா தும்கூர் வரைக்கும் போயிருக்கான்" என்றபடி தன் உபாதையை ரங்குவிடம் சொன்னார். அவன் அவரைச் சோதித்து விட்டு மருந்துகள் எழுதிக் கொடுத்தான். அவனுக்கு நன்றி தெரிவித்து விட்டு அவர் கிளம்பினார்.

அன்று சேது வீடு திரும்பிய போது அவர் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தார். காலையில் அவர் எழுந்திருந்து காப்பி போட்டு விட்டு சேதுவின் அறைக்குச் சென்ற போது அவன் தூங்கிக் கொண்டிருந்தான். இரவு எத்தனை மணிக்கு வந்தானோ? அவர் குளியலை முடித்துப் பூஜை அறையில் இருந்து விட்டு வெளியே வரும் போது அவருக்கு ஆச்சரியம் காத்திருந்தது. சாந்தியும் குழந்தையும் வந்து விட்டார்கள்.

குழந்தை, "அப்பா" என்று கத்திக்கொண்டே சேதுவின் அறைக்குள் நுழைந்து அவனை எழுப்பி விட்டான்.

சாந்தி அவரிடம், "எப்படி இருக்கேள் அப்பா?" என்று யதார்த்தமாகக் கேட்டாள்.

அப்போது குழந்தையுடன் அங்கு வந்த சேது,



“இப்போ எப்படி இருக்குப்பா? ராத்திரி ரங்கு எனக்குப் போன் பண்ணி ஏன் உங்களைத் தனியே அனுப்பிச்சேன்னு கோவிச்சுண்டான்” என்றான். சாந்தியைப் பார்த்து அப்பாவுக்கு ஏற்பட்ட வயிற்று வலி பற்றியும் தான் அவசரமாகத் தும்கூர் போக வேண்டியிருந்ததைப் பற்றியும் சொன்னான்.

“எப்பப் பாத்தாலும் ஆபீசைக் கட்டிண்டு அழுங்கோ. வீட்டு வேலைன்னா மட்டும் உங்களுக்கு டைம் கிடைக்காது” என்று கோபித்துக்கொண்டாள். அவளும் பானுமூர்த்தியைப் பார்த்து இப்போது வலி தேவலையா என்று கேட்டாள்.

“வலி இப்ப இல்லே. மருந்து வேலை செய்யறது” என்று அவர் சொல்லியபடியே, “என்ன டிபன் பண்ணலாம் இன்னிக்கி?” என்று அவளைக் கேட்டார்.

அன்று மாலை நான்கு மணி இருக்கும். அவர் ஹாலில் உட்கார்ந்து ‘ஈடி நவ்’ பார்த்துக் கொண்டிருந்தார். அன்றைய தினம் பங்குச் சந்தையில் எப்படிக் கரடிகள் காளைகளைக் குப்புறக் கீழே தள்ளிவிட்டுப் படுத்தி எடுத்தன என்று ஒரு பெண் புன்னகையுடன் சொல்லிக் கொண்டிருந்தாள். காளைகள் கரடிகளைப் போட்டு மிதித்திருந்தாலும் அவள் முகத்தின் புன்னகை மாறியிருக்காது என்று அவருக்குத் தோன்றியது. பங்கு மார்க்கெட் விவகாரத்தில் சலனமற்று இருக்கும் ஒரே ஜாதி இந்தத் தொலைக்காட்சிப் பணியாளர்கள்தாம்.

அப்போது சாந்தி அவரிடம் வந்து, “அப்பா. குழந்தைக்கு வயிறு சரியில்லே போல. நாலு தடவை வயத்தாலை போயி டயர்டாயிட்டான். ஓஆரெஸ் குடுத்தேன். இப்போ பரவாயில்லே. தூங்கறான். அவருக்குப் போன் பண்ணிச் சொல்றேன். வழக்கம் போல லேட்டா வராம கொஞ்சம் சீக்கிரம் வாங்கோன்னு. வந்தப்பறம் டாக்டர் கிட்டே கூட்டிண்டு போய்க் காமிக்கலாம்” என்றாள். பேசிக் கொண்டே அவள் தன கைபேசியில் சேதுவுக்குப் போன் செய்தாள்.

அவனிடம் அவள் இரண்டு மூன்று தடவை அவன் மாலையில் சீக்கிரம் கிளம்பி வந்தால் போதும், கவலைப்பட ஒன்றும் இல்லை என்றாள்.

ஆனால், அடுத்த பத்தாவது நிமிஷம் வாசலில் கார் வந்து நிற்கும் ஓசை கேட்டது. சேது வேகமாக உள்ளே வந்து சாந்தியிடம், “கிளம்பு. ரங்கு கிட்டே பேசிட்டேன். அவன் வீட்டுக்கே கூட்டிண்டு போயிடலாம்” என்றான்.

சாந்தி அவனிடம், “குழந்தை தூங்கிண்டு இருக்கானே. நான் மருந்தும் கொடுத்திருக்கேன்...” என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே, சேது அவளைப் பார்த்து, “நீ இப்போ குழந்தையை எடுத்துண்டு வராட்டா, நானே தூக்கிண்டு போறேன். மனுஷனோட டென்ஷன் தெரியாம ஏதாவது பேசிண்டு நிக்காதே” என்று கத்தினான். அவள் போய்க் குழந்தையை எடுத்துக்கொண்டு வருவதற்குள் ஹாலில் ஏழெட்டுத் தடவை விறு விறுவென்று

வேகமாக நடந்தான். அவன் முகம் வியர்த்திருந்தது.

அவர் அவனிடம் பதட்டப்படாதே என்று சொல்ல விரும்பினார். ஆனால், அவன் சாந்தியைப் பார்த்துக் கத்தியது போல அவரையும் கத்திவிட்டால்?

“என்ன எழவு பண்ணிண்டிருக்கே?” என்று அவன் மூடியிருந்த கதவைப் பார்த்துச் சத்தமிட்டான்.

“புடவையை மாத்திண்டு வர வேண்டாமா?” என்று சாந்தி பதிலளித்தது அவருக்குக் கேட்டது. அவன் உறுமிக்கொண்டே மறுபடியும் வேகமாக ஹாலை அளக்க ஆரம்பித்தான். சில நிமிடங்களில் சாந்தி குழந்தையை எடுத்துக்கொண்டு வந்தாள். தூக்கத்திலிருந்து எழுப்பியதால் குழந்தை அழுதான். சாந்தியிடமிருந்து அவனை வாங்கிக்கொண்டு சேது வாசலை நோக்கி வேகமாக நடந்தான். சாந்தி அவரிடம், “நாங்க போயிட்டு வரோம்” என்றாள். “காப்பி கூட இன்னும் உங்களுக்குக் கொடுக்கலை. இந்த மனுஷன் படுத்தற பாட்டுலே.”

“அதெல்லாம் நான் பாத்துக்கறேன். நீங்க ஜாக்கிரதையாப் போயிட்டு வாங்கோ” என்றார் அவளுடன் கார் வரை நடந்து கொண்டே.

அவள் ஏறிக்கொண்டதும் கார் கிளம்பிப் போயிற்று. நாலைந்து நாள்களாக நடந்த சம்பவங்களை நினைத்தபடி அவர் அங்கேயே நின்றார். சிரிப்பு வந்தது. ஆச்சரியமாகவும் இருந்தது. அவர் திரும்பி வீட்டைப் பார்க்க நடந்தார்.

மேட்டிலிருந்து பள்ளத்தில் நீர் விழுவது போலப் பள்ளத்திலிருந்து தண்ணீர் ஒரு போதும் மேட்டை நோக்கிப் பாய முடிந்ததில்லை என்று அப்போது அவருக்குத் தோன்றியது. ●

ஸிந்துஜா <weenvy@gmail.com>

# டேவிட் புல்லர் பிரித்தானியாவின் திருடன் மணியன் பிள்ளை

சு.கஜன்

**திருடன் மணியன் பிள்ளை போல் இவரது திருட்டுக்கள் நுட்பம் நிறைந்ததாகவும்சாகசத்தன்மைகொண்டதாகவும்காணப்படுகின்றது. எனினும் மணியன் பிள்ளை போல் இவர் எந்த திருட்டுக்கும் மாட்டுப்படவில்லை. அத்தோடில்லாமல் மணியன் பிள்ளைக்கு ஒரு படி மேலே சென்று இவர் கொலை, பாலியல் வன்புணர்வுகளிலும் ஈடுபட்டிருக்கின்றார்.**

சவக்கிடங்கு 'அசுரன்' என அழைக்கப்படும் நான்கு பிள்ளைகளின் தந்தையான, 67 வயதான டேவிட் புல்லர் (David Puller) என்பருக்கு பிரித்தானிய நீதிமன்றம் கடந்த வருட இறுதியில் ஆயுள்தண்டனை வழங்கியுள்ளது. கடந்த ஒரு வருடமாக நடைபெற்ற இவ்வழக்கில், "இறந்தவர்களுக்கு எதிராக இந்த அளவில் துஷ்பிரயோகம் மேற்கொள்ளப்பட்டதை எந்த பிரித்தானிய நீதிமன்றமும் இதற்கு முன் பார்த்ததில்லை" என நீதிபதி தனது இறுதிக் குறிப்பில் தெரிவித்திருந்தார்.

33 வருடங்களாக சட்டத்தின் கண்ணில் மண்ணை தூவிவிட்டு சர்வ சாதாரணமாகத் திரிந்த புல்லர் கடந்த வருடம் மாட்டிக்கொண்டார். இந்த வழக்கைக் கையாள்வதற்காகச் சிறப்புப் பயிற்சி பெற்ற அதிகாரிகள் 150 பேர் ஈடுபடுத்தப்பட்டனர் எனவும் 2.5 மில்லியன் பவுண்டுகள் வரை செலவிடப்பட்டுள்ளன எனவும் கூறப்படுகிறது. டேவிட் புல்லர் ஒரு கேவலமான நோய்வாய்ப்பட்ட ஒரு விலங்கு எனவும், மனிதாபிமான செயல்கள் அனைத்துக்கும் எதிரானவன் எனவும், இறந்தவர்களின் கண்ணியத்தை மதிக்கத் தெரியாதவன் எனவும், புல்லரினால் பாதிக்கப்பட்டவர்களின் உறவினர்கள் ஊடகங்களுக்குத் தெரிவித்திருந்தனர். இவ்வாறு திட்டித் தீர்க்கும் அளவுக்குப் புல்லர் என்ன செய்தார்? யார் இந்த டேவிட் புல்லர்? எதற்காக இவருக்குப் பிரித்தானிய நீதிமன்றம் ஆயுள்தண்டனை வழங்கியது?



புல்லர் 1989 ஆம் ஆண்டுமுதல் பிரித்தானியாவின் கென்ட் என்னும் பகுதியில் உள்ள மருத்துவமனைகளில் மின்சார இயந்திரங்களைத் திருத்தும் பணியில் ஈடுபட்டு வந்தார். இறுதியாகக் கைது செய்யப்படும்போது டன்பிரிட்ஜ் வெல்ஸ் என்னும் பகுதியில் உள்ள மருத்துவமனையில் பணிபுரிந்தார். பிரித்தானிய வைத்தியசாலையில் மின் பழுது பார்ப்பவராகவும் மின்பராமரிப்பாளராகவும் கடமையாற்றி வந்த புல்லர், வைத்தியசாலை பிணவறையில் உள்ள சடலங்களுடன் புணர்வதும் அவற்றை சட்ட விரோதமாக வீடியோ மற்றும் புகைப்படமாக எடுப்பதையும் பல வருடங்களாக செய்து வந்திருக்கின்றார். சிறுமிகள் உட்பட 102 பெண்களின்

உடல்களை மீண்டும் மீண்டும் பலாத்காரம் செய்திருக்கின்றார். அதில் ஒன்பது வயது சிறுமி, பதினாறு வயது சிறுமி உட்பட நூறு வயது வயோதிக பெண்ணும் அடங்குவர்.

மின் பழுதுபார்க்கும் வேலையில் ஈடுபட்டு வந்ததனால் அவர் அடிக்கடி பிணவறைக்கு சென்று வருவதை மருத்துவமனை ஊழியர்கள் யாரும் சந்தேகப்படவில்லை. அதிலும் குறிப்பாக பெரும்பாலான மருத்துவமனை ஊழியர்கள் மாலை நேரம் வீட்டுக்கு சென்ற பின்னரே புல்லர் பிணவறைக்கு சென்று தனது சட்ட விரோத செயல்களில் ஈடுபட்டு வந்திருக்கின்றார். டேவிட் புல்லர் இந்தக் குற்றங்களை நீண்டகாலமாக செய்து வந்துகொண்டிருந்தமையானது ஒரு தேசிய ஊழல் என ஊடகங்களால் அழைக்கப்படுகின்றது.

கடந்த ஒரு வருடத்திற்கு முன்னர், பிரித்தானியக் காவல்துறையினர் புல்லரை அவரது இல்லத்தில் வைத்து, 1987இல் இடம்பெற்ற வெவ்வேறு இரு கொலைகள் தொடர்பான குற்றத்திற்காகக் கைது செய்தபோது, 2008 முதல் 2020 வரையான காலப்பகுதியில் சடலங்களை பாலியல் ரீதியாக துஷ்பிரயோகம் செய்த காட்சிகளை வீடியோ ஒளிப்பதிவாகவும் புகைப்படங்களாகவும் எடுத்து வைத்திருந்த குறும் தட்டுக்களையும் நெகிழ் வட்டுகளையும் (FloppyDisk) கைப்பற்றியிருந்தனர். அதன் பின்னரே, புல்லர் பல வருடங்களாகச் சடலங்களைத் துஷ்பிரயோகம் செய்து வந்திருக்கின்றார் என்ற தகவல் வெளி உலகிற்குத் தெரிய வந்தது.

புல்லர் 1987ஆம் ஆண்டு வெண்டி நெல், கரோலின் பியர்ஸ் என்னும் இரு பெண்களை பாலியல் வன்புணர்வு செய்தபின் அவர்களைக் கொலை செய்துள்ளார். அந்தக் காலத்தில் 'பெட்ஷிட் கொலைகள்' (Bedsit Murders) எனப் பிரபலமாகப் பேசப்பட்ட இந்த வழக்கின் குற்றவாளி யார் என்று தெரியாமல் வழக்கு கிடப்பிலேயே போடப்பட்டது. கொலையாளியின் இரத்தம் தேய்ந்த கைரேகை மற்றும் டி.என்.ஏ, கொலை நடந்த இடத்தில் இருந்து எடுக்கப்பட்ட போதும், அந்தக் காலத்தில் டி.என்.ஏ. தொழில்நுட்பம் அவ்வளவாக முன்னேற்றகரமாக இல்லாததால் கொலைக் குற்றவாளியைக் கண்டுபிடிப்பது சிரமமாக இருந்தது.

மேம்படுத்தப்பட்ட டி.என்.ஏ தொழில்நுட்பம் தற்பொழுது உள்ளதால் அதனைப் பயன்படுத்தியே, 1987ஆம் ஆண்டு இடம்பெற்ற இரட்டைக் கொலையைப் புல்லர்தான் செய்தார் என உறுதிப்படுத்தப்பட்டது. வெண்டி நெல் கொலை செய்யப்பட்ட இடத்திலிருந்து எடுக்கப்பட்ட டி.என்.ஏ. மாதிரிகளையும் புல்லரின் டி.என்.ஏ மாதிரிகளையும் பரிசோதித்த போது ஒரு பில்லியன் மடங்கு ஒத்துப்போயிருந்தன எனவும், கரோலின் பியர்ஸ் கொலை செய்யப்பட்ட இடத்திலிருந்து எடுக்கப்பட்ட டி.என்.ஏ மாதிரிகள், புல்லரின் டி.என்.ஏ. மாதிரிகளுடன் 160,000 மடங்கு ஒத்துப் போயிருந்தன எனவும் கண்டறியப்பட்டது. இதன் பின்னரே பிரித்தானியக் காவல்துறை புல்லரைக் கைது செய்யும் முடிவுக்கு வந்தது.

இதுதவிர 1973 முதல் 1977 வரையான காலப்பகுதியில் புல்லர் நாற்பதிற்கும் மேற்பட்ட திருட்டுகளில் ஈடுபட்டிருக்கின்றார்; எனினும் போதிய ஆதாரமின்மையினால் அவர் கைது செய்யப்படவில்லை என்பதும் தெரிய வந்தது.

திருடன் மணியன் பிள்ளை போல் இவரது திருட்டுக்கள் நுட்பம் நிறைந்ததாகவும் சாகசத்தன்மை கொண்டதாகவும் காணப்படுகின்றது. எனினும் மணியன் பிள்ளை போல் இவர் எந்த திருட்டுக்கும் மாட்டுப்படவில்லை. அத்தோடில்லாமல் மணியன் பிள்ளைக்கு ஒரு படி மேலே சென்று இவர் கொலை, பாலியல் வன்புணர்வுகளிலும் ஈடுபட்டிருக்கின்றார்.

பிரித்தானியாவில் டி.என்.ஏ. தொழில்-நுட்பமானது எண்பதுகளில் அவ்வளவு மேம்பட்டதாக இருக்கவில்லை. 1995ஆம் ஆண்டுதான் டி.என்.ஏ. தரவுத்தளம் (DNA Database) உருவாக்கப்பட்டது. அதன் பின்னரே பிரித்தானிய மக்களின் டி.என்.ஏ. பற்றிய தகவல்கள் டி.என்.ஏ வங்கியில் (DNA Bank) சேகரிக்கப்பட்டது. ஆகவே, 1995க்கு முன்னரே பாரிய குற்றச் செயல்களில் ஈடுபட்டிருந்த புல்லரைக் கண்டுபிடிப்பது பிரித்தானியக் காவல்துறைக்கு அந்தக் காலத்தில் சிரமமாக இருந்தது.

இரட்டைக் கொலை, திருட்டு, நூற்றிற்கும் மேற்பட்ட இறந்த பெண் உடல்களை பாலியல் துஷ்பிரயோகம் செய்த குற்றச்சாட்டில் கைது செய்யப்பட்ட போது அவரை சுற்றியிருந்தவர்களே கதிகலங்கிப் போனார்கள். ஏனெனில், குழந்தைகள் மீது அன்பு காட்டுபவராகவும் நண்பர்களுக்கு உதவி செய்பவராகவும் பறவைகளைக் கண்காணிக்கும் இயற்கை ஆர்வலராகவும் 'அங்கிள் டேவ்' என செல்லமாக அக்கம்பக்கத்தில் உள்ளவர்களால் அழைக்கப்படுபவராகவும்தான் அவர்களுக்கு அவர் தெரிந்திருந்தார். புல்லரின் உண்மை முகத்தைப் பற்றித் தெரிந்த பொது அவரை சுற்றியிருந்தவர்கள் சற்று ஆடித்தான் போனார்கள்.

குற்றவியல் துறையில் உடைந்த ஜன்னல் கோட்பாடு அல்லது உடைந்த சாளரக் கோட்பாடு (Broken Window Theory) என்று ஒரு கோட்பாடு காணப்படுகின்றது. பிலிப் ஜிம்பார்டோ மேற்கொண்ட பரிசோதனைகளில் இருந்து வில்சன் மற்றும் கெல்லிங் ஆகியோரால் 1982ஆம் ஆண்டு உருவாக்கப்பட்ட இக் கோட்பாட்டின் பிரகாரம் சிறு கொள்ளை, திருட்டு போன்ற சிறு குற்றங்கள் அல்லது குற்றத்திற்கான அறிகுறிகள் ஆரம்பத்தில் கண்டிக்கப்படாவிடில் அவை வளர்ந்து மிகப் பெரும் குற்றச் செயல் செய்வதற்கு ஊக்கமாக அமைந்துவிடும் எனக்கூறுகின்றது. டேவிட் புல்லரைப் பொறுத்தவரை



ஆரம்பத்தில் சிறு சிறு திருட்டுக்களில் ஈடுபட்ட போது கைது செய்யப்பட்டிருந்தால் இத்தகைய பெரும் குற்றங்களில் ஈடுபட்டிருக்கமாட்டார் என்பதே நிதர்சனம்.

டேவிட் புல்லர் Necrophilia (நெக்ரோபிலியா) என்னும் ஒரு வித நோயால் பாதிக்கப்பட்ட நபர் என்றே கூறப்படுகின்றது. இவ்வகை நோயால் பாதிக்கப்பட்டவர்கள் இறந்த உடல்கள் மேல் பாலியல் ரீதியில் ஈர்க்கப்பட்டவர்களாக இருப்பார்கள். இதற்குப் பல காரணங்கள் உண்டு என உளவியலாளர்கள் கருதுகின்றனர். தமது துணையால் நிராகரிக்கப்பட்டவர்கள், அதீத தனிமை உணர்விலிருந்து விடுபட முனைபவர்கள், சடலத்தின் மீது அதிகாரத்தை செலுத்துவதன் மூலம் ஒருவித திருப்தியை அடைபவர்கள், உயிருடன் இருக்கும் பெண்ணுடன் உறவு கொள்வது பாவம் என்ற நம்பிக்கை கொண்டவர்கள், நரம்பியல் கோளாறு உடையவர்கள் எனப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. அத்துடன் மருத்துவமனை ஊழியர்கள், அதுவும் குறிப்பாக பிணவறை ஊழியர்கள், சுடுகாடு அல்லது கல்லறையில் வேலை செய்பவர்களிடம் இந்தக் கோளாறு உருவாகும் சாத்தியம் அதிகம் காணப்படுவதாக ஒரு ஆய்வு தெரிவிக்கின்றது. ஏனெனில், தொழில் நிமித்தம் பிணங்களுடன் தொடர்ந்து தொடர்பைப் பேணி வருவதால் இக்கோளாற்றுக்கு இலகுவில் ஆட்படக்கூடும். அத்துடன் இவர்கள் மரணம் அல்லது கொலையால் ஈர்க்கப்பட்டவராகவும், வன்முறையை விரும்புவர்களாகவும் காணப்படுவர்.

'ஸ்பைடர்' திரைப்படத்தில் வரும் எஸ்.ஜே சூர்யாவின் கதாபாத்திரமும் கிட்டத்தட்ட இதை மனநிலையில்தான் காணப்படும். நெக்ரோபிலியா என்னும் நோயானது மனிதர்களிடம் மட்டுமல்ல சில பறவைகள், தவளைகள், ஊர்வன போன்றன வற்றிடமும் காணப்படுகிறது.

1987 ஆம் ஆண்டு செய்த இரட்டைக் கொலைகளுக்காக புல்லர் தற்பொழுது கைது செய்யப்படவில்லையெனில் கடைசி வரையும் அவர் சட்டத்தின் பிடியில் சிக்கியிருக்கமாட்டார், அவரின் பிணவறை மோசடியும் வெளிவந்திருக்காது.

இங்கிலாந்தின் பல நகரங்களில் பல விசித்திரமான குற்றச் செயல்கள் நடைபெற்றபோதும், காவல்துறை வரலாற்றில் இதுபோன்ற குற்றம் செய்த மனிதனை இதற்கு முதல் கண்டதில்லை எனக் கூறுகிறது, இங்கிலாந்து காவல்துறை. பிரித்தானியக் குற்றவியல் வரலாற்றில் மிகக் கொடூரமான குற்றங்களைச் செய்தவர்களில் டேவிட் புல்லரும் ஒருவர் என்றே வரலாறு அவரை பதிவு செய்து வைத்திருக்கின்றது.

'குற்றவாளிகளாலும் குற்ற வாசனை உள்ளவர்களாலும் நிம்மதியாகத் தூங்க முடியாது' என்கிறார் திருடன் மணியன் பிள்ளை. டேவிட் புல்லர் இதுவரை நிம்மதியாகத் தூங்கினாரோ இல்லையோ இனிமேல் நிம்மதியாகத் தூங்கமுடியாது என்பதே உண்மை. ●

**சு.கஜன்** < gajan2050@yahoo.com>

# சௌவி கவிதைகள்

1. ஞாயிறு காலைச்சிற்றுண்டி

இட்லியை ஸ்பூனால் சாப்பிடும்
பழக்கம் எனக்கில்லை
பக்கத்து இருக்கையிலமர்ந்து
வெட்டி வெட்டி சாப்பிடும்
நவீன யுவதியைப்போல

காப்பியை ஸ்பூனால் எடுத்து உறிஞ்சும்
வழக்கம் இன்னுமெனக்கு வரவில்லை
ரசித்து ரசித்து உறிஞ்சிக்கொண்டிருக்கும்
நடுத்தர வயதுக்காரரைப்போல

ஒரு இட்லியையே
கால்மணிநேரமாய் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்
கூந்தலைக் கட்டாத அந்த யுவதி
உண்மையில்
அவ்வளவுதான் சாப்பிடுவாளா?

கையில் படாமலே சாப்பிட்டுமுடித்துவிட்டு
எழுந்துசென்று கைகழுவாமல்
டிஷ்யூ பேப்பரிலேயே கைதுடைத்து
எழுந்துசெல்லும் அந்த இளைஞனுக்கு
தண்ணீரின் தேவை இல்லையா?

நாயை கையில்பிடித்த சங்கிலியோடு
தேநீர் உறிஞ்சும் தன் எஜமானனை
உண்மையிலேயே நேசிக்குமா
அந்த நாய்?

ஒரு தேநீரருந்திவிட்டு
பத்து ரூபாய் டிப்ஸ் வைத்துப்போகுமவரின்
சம்பாத்தியம் எவ்வளவாக இருக்கும்?



வீட்டுக்குப்போகாத ஞாயிறின்
இளங்காலையில்
மூன்று இட்லி ஒரு வடை காபியென
சிற்றுண்டி முடித்து வெளியேறுவதற்குள்
இப்படித்தான் நிறைந்துவிடுகின்றன
கேள்விகள் பதிலேதும் தராமல்...



2. ஒரு பொய்யென்பது

ஒரு பொய் சொல்வதற்கான
வார்த்தைகளைக் கோர்க்கத் தொடங்குகிறேன்
வசப்படாமல் தயங்கித்தயங்கி நிற்கின்றன
சொற்கள்
வார்த்தைகளை உருவாக்கத் தெரியாத
கல்லாத விரல்களைப்போல

கஷ்டப்பட்டு இழுத்துக்கொண்டு வந்த சொற்களும்
தப்பித்து ஓடிவிடுவதற்கே ஆயத்தமாக இருக்கின்றன
வனத்தில் புலியைக்கண்ட
மருண்ட மானைப்போல

சொற்களைக் கோர்த்து வார்த்தைகளாக்கி
சற்றே நிறுத்திவைத்துப் பார்க்கிறேன்
சடசடவென இடிந்து விழுந்து
எழுந்து ஓடுகின்றன சொற்கள்

சற்றே தைரியமான சொற்கள் சில
ஓடாமல் நின்று
பொய் சொல்லக்கூடாதென அறிவுரை சொல்கின்றன
இன்னும் சில சொற்களோ
எப்போதோ பொய்சொல்லி அவமானப்பட்ட
அனுபவத்தைச் சொல்கின்றன
சில சொற்கள்
பொய்சொல்லி அடிபட்ட காயங்களின்
தழும்புகளைக் காட்டுகின்றன

கட்டுப்படாத சொற்களின் கரைமீறலால்
வசமான வார்த்தைகளைக் கோர்ப்பதென்பது
அகப்பட மறுக்கிறது
வயிற்றில் கொஞ்சம் அமிலம் சுரக்கிறது
இதயம் கொஞ்சம் படபடக்கிறது
நாக்கின் ஈரப்பதம் உலர்கிறது

ஒரு பொய் சொல்வதென்பது
ஒரு முத்தமிடுவதைப் போலவோ
ஒரு கட்டியணைத்தலைப் போலவோ
ஒரு கவிதை எழுதுவதைப் போலவோ
ஒரு கலவிகொள்வதைப் போலவோ
அவ்வளவு சுலபமாயில்லை ●

**சௌவி** <souvi36@hotmail.com>

# சோறு!

மணி எம் கே மணி

ஓவியம்: கதி பார்ப்ரோ

**"ஆமா நீ ஒரு மூட்ட வெச்சு இருக்கறதா சொன்ன இல்ல? என்னோட பழைய ப்ளு கலர் சாரிய கூட அதில பத்ரமா வெச்சு இருக்கறதா சொன்னியே?" "ஆமா." "அத எடுத்து கழுத்ல சுருக்கு போட்டு எங்கயாவது தொங்கிரு. நான் சொன்னதத்தான் நீ கேக்க மாட்ட. பழைய லவ்வர் சொல்றத கேக்கலாம் இல்ல? செத்து தொல!"**

அது நீல வர்ண சேலை. பழையது. அதைக் கழுத்தில் சுருக்கு போட்டுக்கொண்டு தணிகைவேல் தூக்குப்போட்டு இறந்து எட்டு வருடமாகிறது. அப்போது இங்கே வந்து சில நாட்கள் இருந்த துர்கா, அதற்கு அப்புறம் பஹ்ரைனில் இருந்து, இப்போது தான் வந்திருக்கிறேன் என்றாள். கணவரும் பிள்ளைகளும் கூட வந்திருக்கிறார்களாம். உனது முகவரியைத் தேடிக் கண்டுபிடித்தேன் என்கிற செய்தியை அவள் சொன்னபோது மகியால் புன்னகைக்க மட்டுமே முடிந்தது.

மகி எழுதும் தொலைக்காட்சித் தொடரில் அன்று ஒரு சிக்கல். திரைக்கதையில் நாயகனுக்கு ஒரு ஆபரேஷன். அவனது மனைவி அலகு குத்திக்கொண்டு தேர் இழுக்கப் போகிறாள். அவனது பழைய காதலியாக இருந்து, இப்போது அடியாட்களை எல்லாம் சேர்த்துக்கொண்டு வில்லியாகி விட்ட மற்றொருத்தி மண்சோறு சாப்பிடுவதாகக் குழு பேசி வைத்து இருந்தார்கள். மகி இவற்றைப் பாதி எழுதி முடித்த நிலையில் திடீர் என்று மாற்றம் செய்தால்?



வில்லி மண் சோறு சாப்பிடக் கூடாது; மற்றவள் அலகு குத்திக்கொள்ளும் முன்பு அதில் விஷத்தைத் தடவி விட வேண்டும் என்பது புது ஐடியா. இந்த வாரம் ரேட்டிங்கை சரி செய்ய வேண்டும் என்றார்கள். மாற்றி எழுத வேண்டிய அலுப்பில் மகி நாளைக்கு எழுதலாம்என்றுதள்ளிப்போட்டுப்படுத்துக்கொண்ட போதுதான் துர்கா வந்தாள்.

அதிர்ச்சியை மறைக்க முடியவில்லை என்பது உண்மை.

துர்கா முகத்திலும் ஒரு அசட்டுத்தன்மை இருந்திருந்து, ஒளிவதற்குப் பிரயத்தனப்பட்டது.

மகி ஒரு காப்பி போட்டாள். அங்கே துர்காவின் கணவன் மருத்துவராக பணிபுரிகிற மருத்துவமனையில் தான் அவளும் லாப் டெக்னீஷியனாக வேலை செய்கிறாள். மகன் ஒரு அமெரிக்க கான்வென்டில் பள்ளிப் படிப்பை முடித்திருக்கிறான். அவனுக்கும் டாக்டர் ஆவதுதான் லட்சியம்.

மகியின் தொழில் பற்றி துர்காவுக்கு வியப்புதான். "உனக்கு அவ்வளவு எழுத வருமா?" மகி நூறு கதாபாத்திரங்கள் அனுமதி இல்லாமல் கனவில் வந்து தூக்கம் கெடுப்பதைக் கொஞ்சம் மசாலா கலந்து சொன்னபோது சிரிப்பு வந்து ஒரு சகஜம் புரண்டாலும் இரண்டு பேருக்கும் நடுவில ஒரு விறைப்பு இருந்தவாறிருந்தது. அந்த அமைதி நேரிடும்போது அது சகிக்கும்படியாக இல்லை.

"வெளிய போயி ஒரு லஞ்ச் சாப்பிடுவோமா மகி?"

அன்று சனிக்கிழமையாதலால் மகியின் மகளுக்கு மதியத்துக்கு மேல் விடுமுறை. அவளையும் கூட்டிக் கொண்டார்கள். மகி கார் ஓட்டுவதை பார்த்துக்கொண்டே, மகியின் மகளிடம் துர்கா சடங்குக்கு பேசிக்கொண்டு வந்தாள். எட்டாம் வகுப்பில் படிக்கிறவளும் பதினான்கு



வயதுக்காரியுமான ஷீபுவும் சடங்குகளுக்கு பழகியிருந்தாள். சொல்லப்போனால், ஆங்கிலம் அதற்கு வசதியான பாஷை.

ஷீபு தேர்வு செய்த ஹோட்டல் சற்று தூரம்தான்.

துர்கா, தணிகைவேலின் பால்ய கால சகி.

தணிகையின் குடும்பமும் துர்காவின் குடும்பமும் ஒரு வீட்டில் இரண்டு பக்கமாகக் குடித்தனம் இருந்திருக்கிறார்கள். ஊரிலிருந்து வந்து நகரத்தில் குடியேறி ஒருவருக்கு மற்றவர் ஆறுதலாகும் அன்னியோன்னியம் பெரியவர்களிடையே தழைத்திருந்தது. கடவுளே வந்து பிணைத்துவிட்டது போலத்தான் குழந்தைகள் மனம் ஒன்றுபட்டன. அடித்துக் கொண்டும் அணைத்துக் கொண்டும் இருந்த அந்தக் காலத்தின் நினைவுகளை, மகியிடம் பலமுறை தணிகை சொல்லியிருக்கிறான்.

துர்காவால் ஆணி கொண்டு கீறப்பட்ட ஒரு காயம் வைத்த தழும்பு தணிகையின் புருவ மயிர்களை விலக்கிப் பார்த்தால் தெரியும். பெரியவர்களை மறைந்து இருந்து பார்த்த பழக்கத்தில் கெட்ட வேலைகளை செய்து பார்த்திருக்கிறார்கள். உண்மையில் அந்த உறுப்புகளை வைத்து கொண்டு அவர்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அதற்காக செமத்தியாக அடி வாங்கும்போதும்தான்.

துர்கா, பிற்காலத்தில் பெங்களூரிலிருந்து சென்னைக்கு எப்போதாவது வரும்போது தணிகையின் வீட்டுக்கு வருவாள். இருவரும்

மனம்விட்டு பேசிக்கொள்ள முடியாத அளவில் காலம் புகுந்து களித்து விட்டிருந்தது. கண்ட படிப்புகளையும் படித்தவாறே இருந்த அவளை ஏறிட்டுப் பார்க்கவும் அவனுக்கு அச்சமாம். மற்றும் அப்படியே தலைகீழாக மாற்றி நிறுத்தி இருந்த அவளுடைய அழகு. தூய அழகில், என்ன இப்படி மிருகம் போலிருக்கிறாள்? ஒருகணம் வெறித்துப் பார்த்து அவனை நோக்கி அவள் ஓரிரு புன்னகைகள் செய்ததை எடுத்து வைத்துக்கொண்டு அவன் பல இரவுகள் அழுதிருக்கிறான். அவளுக்கு திருமணம் நடந்துவிட்டது என்று கேள்விப்பட்ட ஒருநாளில் நெஞ்சின் கதவை யாரோ திறந்துவிட்டது போல புதிய காற்று வந்தது. நிம்மதி என்று வாய்விட்டே சொல்லிக்கொண்டான்.

மகியை திருமணம் செய்துகொண்ட ஆரம்ப நாட்கள் தப்பு சொல்லும்படி இல்லை. அவன் தனது மனைவியை, மகளை கட்டிப் பிடித்து உறங்குகிறவன். அவ்வப்போது மகிக்கு ஒரு மகன் மீது ஊறி வர வேண்டிய வாஞ்சை அவன் மீது பெருக்கெடுக்கும். அவனைத் தூண்டி விட்டு, பேச வைத்து, அவன் வாழ்வில் கடந்த பல கதைகளைக் கேட்டிருக்கிறாள். இவளும் தான் படித்த கதைகள், நாவல்களை அவனிடம் விவரித்திருக்கிறாள். ஆனால், ஒருநாள் அது நடந்தது. நடு இரவில் அவளை எழுப்பி பசிக்கிறது என்று மென்று முழுங்க, அவள் சமைத்துப்போட்டிருக்கிறாள். அவன் சாப்பிடுவதைத் திகைத்திருக்கிறாள்.

சக்கரை வியாதியில் அது ஒரு பிரிவு என்றார்கள்.

மகியிடம் யாராவது ஒருவர் சொல்லுவார்கள். இன்று தணிகை வந்து சாப்பாடு கேட்டு சாப்பிட்டான். ஒரே நாளில் அதை இரண்டு பேர் சொல்லும்போது கேட்க பீதியுண்டாயிற்று. அவனைக் கேட்டபோது அவனால் பதில் சொல்ல முடியவில்லை. இளைத்துக் கொண்டிருந்தான். மாத்திரைகள் சாப்பிடாமல் இருப்பதற்கு ஏதேதோ காரணங்கள் சொன்னான். வேலையை விட்டு அனுப்பிவிட்டார்கள். அவனுடைய பசி வளர்ந்துகொண்டே போயிற்று. குழந்தையை அம்மாவின் பொறுப்பில் விட்டுவிட்டு, சம்பாதித்து கொண்டுவந்து வடித்துக் கொட்டியும் அவனது உலை கொதித்தவாறு தகித்தது. அவன் மீது பரிவோடு இருந்த பாயம்மா கூட நொந்து விட்டார்கள். “முடியலப்பா, என்ன விட்ரு.” அவனுடைய வற்புறுத்தல்கள் காதுக்குள் வந்து கேட்பது முடியாமல் மகி அவனை கைவிட்டுவிட்டு போனாள். அங்கே வந்து அவன் தேடியபோது அண்ணன்களும் அக்கம்பக்கத்தாரும் சேர்ந்து துரத்தி விட்டார்கள்.

சின்ன எடுபிடி வேலைகள் செய்து கொடுத்து காசு வாங்கி அல்லது பிச்சை எடுத்து தெருவில் படுத்துக்கொண்டதற்கு, அவன் எங்காவது ஒரு திக்கில் வேதனை கொண்டதில்லை. ஒரு ஞானிக்கோ சித்தனுக்கோ கிடைக்க வேண்டிய திடமனம் அவனிடம் முழுமையாக அமையாமல் போனதற்கு காரணம் அந்த பசி.

அவனைத் தவிர அனைவருமே அதை சிந்திக்க திணறினார்கள்.

மகளை படிக்க அனுப்பி, மீடியா பிரிவில் நல்ல ஒரு வேலை கிடைத்ததும் மகி அவனை நினைப்பதை நிறுத்தினாள். மறுமணம் செய்துகொள்வது என்றால், அவனிடம் பேசி விவாகரத்து வாங்க வேண்டுமா அல்லது அவன் சாவான் என்று காத்திருக்க வேண்டுமா என்பதுதான் புரியவில்லை. ஆனால், அந்த வழிக்கு போக முடியாது என்று மகியாகவே தவிர்த்துவிட்டாள். ஒன்று, சந்தித்த ஆண்களில் பலருக்கும் இருந்த ஓநாய் முகம். அடுத்தது எப்போதேனும் மகள் கேட்டு விடுகிற கேள்வி.

“அப்பா இப்ப எங்க இருப்பார்?”

மகி எவ்வளவு தான் வண்டியோட்டுவதில் கவனமாக இருந்தாலும் பார்வையால் தனது மகளை எப்போதும் வருடிக் கொண்டிருப்பதை துர்காவால் கவனிக்க முடிந்தது. மகி தன்னை கவனித்துக்கொள்ளாமல் உடலைக் கைவிட்டு விட்டிருக்கிறாள். அவளுடைய மொத்த வாழ்வும் இப்போது மகளை சார்ந்திருக்கிறது. மகளுக்காக மூச்சு விட்டுக் கொண்டிருக்கிறாள். துர்காவிற்கு அனுதாபம் தோன்றியது. ஷீபுவை கவனிக்க, அவள் இந்த காலத்து குட்டி. மொபைலில் சுழலுவது அவள் காலத்தின் கடமை. படிப்பில் சரியான கவனம் இல்லை என்று மகி வருத்தப்பட்டாள்.

தணிகை நன்றாகப் படித்திருந்தால் வேறு வாழ்க்கை வாழ்ந்திருப்பானோ?

இந்தியாவின் விசேஷங்கள், சென்னை மனிதர்கள் இவர்களைப் பற்றி எல்லாம் அறியும்போது தணிகையைப் பற்றியும் துர்கா கேள்விப்பட்டாள். அதைப் பற்றி அவளால் எதையும் தீர்ப்பு சொல்லவே முடியவில்லை. சில இரவுகள் எழுப்பி அமர வைத்தன. சில நாட்களில் விஸ்கி எடுத்துக் கொண்டிருக்கிறாள்.

சென்னைக்கு அந்தமுறை வந்து தேடியபோது அவன் படுக்கிற இடம் யாருக்கும் தெரியவில்லை. நம்பரை கண்டடைந்து மகிக்கு பேசியபோது அவள் வெடுக்கென்று போனை அணைத்து முடித்தாள். ஒரு நாள் நள்ளிரவு இவள் இருந்த வீட்டின் கதவு தட்டப்பட்டது. புருஷன், மாமியார், நாத்தனார்கள், குழந்தைகள் என்று திருவிழா கூட்டம்.

கதவைத் திறந்ததும் சிரித்துக்கொண்டு நின்றிருந்த தணிகையின் கோலத்துக்கு துர்கா ஒருமுறை வாய்



விட்டு கதறி அழுதாள்.

அவன் முகத்தில் சிரிப்பு போகவில்லை.

கொஞ்சம் மலைப்புக்குப் பின்னால் துர்காவுடன் அவளது குடும்பமே அவனிடம் பேசியது. எவ்வளவு பணம் செலவானாலும் சிகிச்சை செலவை ஏற்றுக்கொண்டு உன்னை நான் குணப்படுத்துகிறேன் என்று துர்காவின் கணவர் சவாலாகவே சொன்னார்.

அவன் முகத்தில் சிரிப்பு போகவில்லை.

படுத்துக்கொள்ள சொன்னபோது மறுத்து விட்டான்.

அவர்கள் வேட்டி, சட்டை, துண்டு என்று பெரிய ஒருபையைக் கொடுத்தார்கள். வாங்கிக்கொண்டான்.

“போயிட்டுவா தணிகா. நாளைக்குஎல்லாத்தையும் சரி பண்ணிரலாம்!”

“ம்.”

“ஒண்ணு கேக்கவா உன்கிட்ட? எதுக்காக இப்படி நீ சிரிச்சுகிட்டு இருக்க?”

“சோறு இருந்தா போடு துர்கா. பசிக்குது!”

எல்லோரும் படுக்க சென்றுவிட்டார்கள். அவன் சாப்பிடுவதை பார்க்கிற வாய்ப்பு இப்போதுதான் துர்காவிற்குக் கிடைத்திருக்கிறது. தணிகா என்கிற எப்போதோ காணாமல் போன ஒரு சிறுவன், அவர்களுக்கு நடுவே ஓடி விளையாடி அவளைப் பிடித்துக்கொண்டிருந்தான். இறங்கிவழிகிறகண்ணீரை துடைக்க மறந்து வாயிற்குள் உப்பு கரித்தது. முதலில் ஒழுகுகிற மூக்கைத் துடைத்துக்கொண்டாள். தன்னை அவன் ஏறிட்டும் பார்க்கவில்லை என்பதைத்தான் தாங்கவே முடியவில்லை. முகத்தின் அந்த சிரிப்பும் முடிந்து விட்டது.

சென்று வருவதாக புறப்பட்ட அவனை உதைக்க வேண்டும் என்பது போல வந்த ஆத்திரத்தில், “நீ ஏன் எங்கயாவது போய் சாவக்கூடாது தணிகா?” என்று கேட்டதை ஒரு கணம் வெறித்தான்.

துர்காவிற்கு மூச்சு வாங்கியது.

சென்றவன் ஒரு போன் பூத்தில் இருந்து மகிக்கு பேசியிருக்கிறான்.

அன்று என்பது ஒரு தினம். மகிக்கு போனை எடுக்க தோன்றி இருக்கிறது. இந்த மாதிரி, துர்கா வீட்டுக்குப் போனேன், அங்கேயும் சாப்பாடு வாங்கி சாப்பிட்டு விட்டேன் என்று நடந்தவற்றை ஒரு உணர்வுமற்ற குரலில் சொல்லி இருக்கிறான்.

“ஆமா நீ ஒரு மூட்ட வெச்சு இருக்கறதா சொன்ன இல்ல? என்னோட பழைய ப்ளு கலர் சாரிய கூட அதில பத்ரமா வெச்சு இருக்கறதா சொன்னியே?”

“ஆமா.”

“அத எடுத்து கழுத்ல சுருக்கு போட்டு எங்கயாவது தொங்கிரு. நான் சொன்னதத்தான் நீ கேக்க மாட்ட. பழைய லவ்வர் சொல்றத கேக்கலாம் இல்ல? செத்து தொல!”

அன்று அவனுக்கு ஒரு தினம். அவனுக்கு விருப்பமாயிருந்த இருவரின் பேச்சையும் மனம்விட்டு கேட்டு விட்டான்.

உணவு வந்தது.

சாய்ஸ் ஷீபு தான். அவளது ஆர்டரின் பேரில் எல்லோருக்கும் பன் பரோட்டாவும் நாட்டுக்கோழி குழம்பும் வந்தது. மெதுவாகசாப்பிட ஆரம்பித்தார்கள். ஷீபு செல்லைப் பார்த்துக்கொண்டே கொறித்துக் கொண்டிருந்தாள்.

மகிக்கு தான் கவலை.

‘துர்கா, ரைஸ் ஆர்டர் பண்ணலாமா என்பது போல எதையும் கேட்டுவிடக் கூடாது; எனக்கு அது பிடிக்காது என்று ஷீபு பதில் சொல்லிவிடக் கூடாது.’ ●

**மணி எம் கே மணி** <mkmani1964@gmail.com>

# வீறுபெற்று விடுதலையாகி நிற்கும் ‘நவீன தமிழ்’

சந்தியா நடராஜன்

**பெரிய வளர்ச்சியையும் அளவுக்கதிகமான வாய்ப்புகளையும் புதிய திறப்புகளையும் கண்டுள்ள கடந்த 20 ஆண்டு கால தமிழ் இலக்கியத்தை வெறும் ‘நவீன தமிழ்’ என்று மட்டுமே அழைக்க முடியுமா? ‘நவீன தமிழ்’ வீறுபெற்று விடுதலையாகி சமத்துவம் எய்தி நிற்கிற இந்த இருபது ஆண்டு காலத் தமிழுக்கென்று தனிப்பெயர் வேண்டும் இல்லையா?**

கடந்த முப்பது ஆண்டுகளில் இலக்கிய விழாக்களிலும் அறிமுக உரைகளிலும் புத்தகங்களின் பின்னட்டை வாசகங்களிலும் ஒரு சொற்றொடர் இடையறாது பயன்படுத்தப்பட்டு வருகிறது. அந்தச் சொற்றொடர், ‘நவீன தமிழ் இலக்கியப் பரப்பில்..’. இன்று பேச்சிலும் எழுத்திலும் ஒரு தொடக்க வரியாக இந்த சொற்றொடர் நிலைபெற்று நிற்கிறது. இதற்கு முந்தைய காலத்தில் ‘இந்தத் தமிழ் கூறும் நல்லுலகத்தில்’ என்ற வரி பாடாய்ப்படுத்தி வந்தது.

தற்போது சிலர், ‘நான் மாடர்ன் லிட்டரேச்சர்ல ஒர்க் பண்றேன்’ என்று சொல்கிறார்கள். ஆங்கில இலக்கியத்தில், Modern English Period என்றும் Modern English Literature என்றும் இருவிதமான சொல்லாடல்களைப் பார்க்க முடிகிறது. ‘மாடர்ன் பீரியடு’ என்பது ஆங்கில இலக்கிய வரலாற்றின் ஒரு காலகட்டத்தைக் குறிக்கிறது. அதாவது 16ஆம் நூற்றாண்டு முதல் 20ஆம் நூற்றாண்டு வரை உள்ள காலம் ‘மாடர்ன் பீரியட்’. ‘மாடர்ன் லிட்டரேச்சர்’ என்பது விக்டோரியா காலத்தின் முடிவிலிருந்து இரண்டாவது உலகப்போரின் முடிவுவரையிலான ஆங்கில இலக்கியத்தைக் குறிக்கிறது. Modernism என்ற சொல் (நவீனத்துவம்) உலகெங்கும் மாற்றம் கண்டுவந்த கலை இலக்கிய ரசனையை எடுத்துரைத்தது; வளர்த்தெடுத்தது. கலை உலகத்தில் பாப்லோ பிகாசோவும் கவிதையில் டி.எஸ். எலியட்டும் நாவலில் ஜேம்ஸ் ஜாய்ஸும் நவீனத்துவத்தைத் தொடக்கி வைத்த ஆளுமைகளாகக் கருதப்படுகிறார்கள். இரண்டாம் உலகப் போருக்குப் பிந்தைய கலை இலக்கிய வடிவங்களை வகைப்படுத்த ‘பின் நவீனத்துவம்’ (Post Modernism) என்ற சொல் பயன்பட்டது.



ஆனால், இக்கால ‘தமிழ் இலக்கியப் பரப்பில்’ பயன்படுத்தப்படும் ‘மாடர்ன் லிட்டரேச்சர்’ என்ற சொல்லாடல் கடந்த 100 ஆண்டு கால புனைவிலக்கியத்திற்கான (மர்ம நாவல்கள், குடும்ப நாவல்கள், சரித்திர நாவல்கள் தவிர்த்து) பொதுச் சொல்லாகவே அம்பலத்தில் ஆடி வருகிறது.

21ஆம் நூற்றாண்டின் முதல் இருபது ஆண்டுகளைக் கடந்து நிற்கும் தமிழ் இலக்கியத்தின் வேகமும் வளர்ச்சியும் ஒரு நூற்றாண்டு கால ஒட்டு மொத்த வளர்ச்சிக்கு ஈடானது. இலக்கியத்தில் வரம்புகளற்ற ஒரு வெளி உருவாகியிருக்கிறது. சமூகத்தின் எல்லாப் பிரிவினருக்கும் எழுத்து ஆயுதமாகியிருக்கிறது. பிதாமகர்களின் அங்கீகரிப்புகள், தரவரிசைப் பட்டியல் என்பன போன்ற தளைகளுக்கு இனி இடமில்லை. ஆற்றல் பெற்றவனை அதிகார பீடங்களும் அழைத்துக்கொள்ளும் அல்லது அணைத்துச் செல்லும் காலமிது. தமிழ் இலக்கியத்தில் அனைத்து வயதுப் பெண்களும் தீவிரமாகவும் சுதந்திரமாகவும் செயல்படும் காலகட்டமாகவும் இந்த இருபதாண்டு காலம் இருந்து வந்துள்ளது.



க. வெங்கடேசன்



ஜோ டி குரூஸ்



சரவணன் சந்திரன்



சாம்ராஜ்

இணையம் இதயத்தை மலரச் செய்துள்ளது. தடைகளைத் தகர்த்து எறிந்திருக்கிறது. பேதங்கள் முகம் காட்டுவதில்லை. பேரிடர் காலத்திலும் சதா சர்வ காலமும் இணைய வழியில் இலக்கியம் பேசினார்கள். அச்சு இதழ்கள் இயக்கமற்ற நிலையில் இணைய இதழ்கள் விண்வெளியை நிறைத்தன. இருந்த இடத்தில் இருந்தபடியே எல்லாமும் வந்து சேர்ந்தன. நவீன எழுத்தாளர்களின் உரைகளைக் கேட்கக் கட்டணம் விதிக்கப்பட்டது. வாசகர்கள் அதற்குத் தயாராக இருந்தார்கள். எழுத்தாளர்கள் கொண்டாடப்பட்டார்கள்; கொண்டாடப்படுகிறார்கள். எழுத்தாளர்கள் எண்ணிக்கையை முகநூல் பெருக்கியது.

வாங்கிய, படித்த, படிக்காமலே வைத்திருந்த புத்தகங்களின் பட்டியல் அல்லது புகைப்படங்களை முகநூலில் பதிவு செய்தார்கள்; எழுத்தாளர்கள் வீட்டு விஷேசங்கள் அனைத்தும் முகநூல் மூலம் விண்ணில் வலம் வந்தன; பதிவைப் படிக்காமலே பார்த்த மரத்திரத்தில் விஷயம் புரிந்து வாழ்த்துத் தெரிவித்தார்கள்; வருத்தம் தெரிவித்தார்கள். அஞ்சலி செலுத்தினார்கள்; யாரும் உணர்ச்சிவசப்படுவதில்லை. இயந்திரம் உங்களுக்குப் பதிலாக; இயந்திர கதியில்

நீங்கள். ஜகம் புகழும் முகநூலின் புண்ணிய கதை உணர்ச்சிகளைக் கொட்டியது இப்படி!

முகநூலில் பதிவிடும் வேகத்தில் எழுத்தாளர்கள் தன்னிலை மறந்தனர். அவசரத்தில் கொட்டிய எழுத்துகளின் நிழலில் பொதிந்திருந்த அரசியல், அபிலாஷைகள், மலரிடல், மாய வலை, அந்தரங்கம், அரிப்பு, ஆர்வம், இலக்கு எல்லாம் வெட்ட வெளிச்சமாகின. சர்வமும் நிர்வாணமானது. வாழ்க முகநூல்!

2020ஆம் ஆண்டு மார்ச் மாதத்தின் இறுதி வாரத்தில் கோவிட் பெருந்தொற்றைக் கட்டுக்குள் கொண்டு வர இந்திய நடுவண் அரசு ஊரடங்கு உத்தரவைப் பிறப்பித்தது. இடம்பெயர்ந்து, புலம்பெயர்ந்து பணி தேடி உழைத்துப் பிழைக்க வந்த மனித வர்க்கம் இந்த நூற்றாண்டின் மாபெரும் துயரத்தைச் சந்தித்தது. தமிழகம் நான்கு சுவர்களுக்குள் ஒடுங்கிக் கிடந்தது. ஆண்களுக்கு அந்த ஊரடங்கு காலம் ஏக வஸ்திர காலமானது. இந்தச் சமயத்தில் தான் Zoom செயலி தமிழ் இலக்கியப் பயன்பாட்டுக்குப் பெரிதும் துணை நின்றது. ஆலயங்களில் ஆண்டவனுக்கு ஒரு கால பூஜைக்கே உத்திரவாதம் இல்லாத காலகட்டத்தில் நவீன தமிழ் இலக்கியத்திற்கு Zoom செயலி மூலம் ஆறுகால பூஜை நடந்தது. கவிதை நேசிப்புக்கு ஒரு கூட்டம், கவிதை வாசிப்புக்கு ஒரு கூட்டம், கலைஞர்களைக் கொண்டாட ஒரு கூட்டம், கலந்துரையாடல், அளவளாவல், விமர்சனக் கூட்டம், நூல் அறிமுகம், நவீன இலக்கியத் தொடர் சொற்பொழிவு என அல்லும் பகலும் Zoom அமர்க்களப்பட்டது. அதைத் தொடர்ந்து Google Meet மூலமும் நிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஒலிப் புத்தக நிறுவனங்கள் பல்கிப் பெருகின.

அமேசான் கிண்டில் மூலம் எழுத்தாளர்கள் நல்ல சன்மானம் பெற்றனர். பெற்ற பெருந்தொகைக் கணக்கை சில எழுத்தாளர்கள் பெருமையோடு முகநூல் மூலம் அறிவித்தனர். செல்லுபடியாகாதவர்கள் புலம்பல் புராணங்களை எழுதி அரங்கேற்றினர். அமேசான் நிறுவனம் இணையம் மூலமாக போட்டி நடத்தி வெற்றி பெற்ற எழுத்தாளருக்கு 5 லட்சம் ரூபாய் பரிசளித்தது. நவீன இலக்கிய எழுத்தாளர்கள்தான் நடுவர்களாக இருந்து போட்டிக்கு வந்த நாவல்களைப் பரிசீலனை செய்தனர். நல்ல நோக்கத்துடன் ஒரு முயற்சியை முன்னெடுத்த பன்னாட்டு நிறுவனமும் பழிக்கு ஆளாகாமல் தப்பவில்லை. வெற்றி பெற்றவரும் தனது வெற்றியைக் கொண்டாட முடியவில்லை. தோற்றவர்கள் வெற்றியாளனின் வியூகங்கள் மீது விசாரணை நடத்திக் கொண்டிருந்தார்கள்.

சாகித்திய அகாதெமியின் புத்தக வெளியீடுகளில்/ விற்பனையில் இந்திக்கு அடுத்தபடியாக தமிழ் மொழி இரண்டாவது இடத்தைப் பெற்றிருக்கிறது. 1954 மார்ச் 12இல் நேரு காலத்தில் தொடங்கப்பட்ட சாகித்திய அகாதெமியின் தமிழ்ப் பிரிவு குறைந்தபட்சம் மாதத்திற்கு 3 இலக்கியக் கூட்டங்களை நடத்தி வருகிறது. ஆண்டுக்கு ஒரு தேசிய கருத்தரங்கமும் 5 அல்லது 6 உரை அரங்கமும் நடத்தப் பெறுகின்றன. ஆனால், தமிழ் எழுத்துலகத்திற்கு டிசம்பர் மாதத்தில்தான் சாகித்திய அகாதெமி குளிர் காய்ச்சல் வருகிறது. சாகித்திய 'அகாதெமி விருது' ஒன்றே அந்த நிறுவனத்தின் செயல்பாடு போல ஒரு தோற்றம் எழுகிறது. சாகித்திய அகாதெமி விருதுக்குத் தேர்வு செய்யப்படும் எழுத்தாளர்களைத் தேர்ந்தெடுக்கும் நடுவர்கள் தமிழ்ப் படைப்பாளிகள்தான். அப்படியிருக்கையில் விருது பெற்ற எழுத்தாளரைச் சொல்லால் அடித்துக் கொலை செய்வது ஏனென்று புரியவில்லை! 'எழுத்தாளர்கள் கொண்டாடப்பட வேண்டும்' என்று எல்லா எழுத்தாளர்களும் உரத்த குரலில் பேசுகிறார்கள். ஆனால், ஓர் எழுத்தாளருக்கு சிறப்பு செய்யப்படுகிற வேளையில் அவரை ஒரு நாள்கூட நிம்மதியாக உறங்கவிடக் கூடாது என்பதில் மனவுறுதியுடன் செயல்படுபவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். விருது பெற்றவரோ தனக்கு அந்த விருது பத்துப் பதினைந்து ஆண்டுகள் தாமதமாகக் கொடுக்கப்பட்டதாகச் சங்கடப்படுகிறார். அவரது வாக்குமூலமோ அவருக்கு முன்பாகச் சாகித்திய அகாதெமி விருது பெற்றவர்களை நோக அடிக்கிறது.

எழுத்தாளர்கள் சமத்துவம் எய்தியிருக்கிற கடந்த இருபது ஆண்டுகளில் முதல் நூலின் மூலமே முத்திரை பதித்தவர்கள் பலர். எனக்குத் தெரிந்த வகையில் சாம்ராஜ், லிபி ஆரண்யா, இசை, போகன் சங்கர், சரவணன் சந்திரன் எனப் பல ஆற்றல் மிக்க படைப்பாளிகளைக் குறிப்பிடலாம்.

எழில் வரதன் என்றொரு ஒசூர்க்காரரின் முதல் சிறுகதைத் தொகுப்பு 'ரதிப்பெண்கள் திரியும் அங்காடித் தெரு' 2004ஆம் ஆண்டு வெளிவந்தது. வெளிவந்த சில மாதங்களில் அவரை 'ஆனந்த விகடன்' கண்டுகொண்டது. அவரது கதைகள் விகடனில் தொடர்ந்து இடம்பெற்று வந்தன. எழில் வரதனின் கதைகளை விகடனே நூலாகவும் வெளியிட்டது. பிறகு 5-6 ஆண்டுகள் வரையில் விகடன் நிறுவனத்தின் சின்னத்திரை தொடருக்கு வசனம் எழுதி வந்தார். கதையில் வசனம் வைக்காமல் வசனங்களால் கதையை நகர்த்தும் திறமை கொண்டவர் எழில் வரதன். அவரைக் கண்டெடுத்தவர் ஆதவன் தீட்சண்யா. அவரது எழுத்தே அவரை ஆற்றுப்படுத்தியது.

சாம்ராஜின் சாம்ராஜ்யமும் கடல் கடந்து விரிந்து கொண்டிருக்கிறது. இசைபட வாழ்கிறார் இசை. பெரும் குடும்பஸ்தரான லிபி ஆரண்யா கொஞ்சம் எழுதினாலும் வாசகர்களை எதிர்பார்ப்பில் தக்க வைக்கிறார்.

சரவணன் சந்திரனின் கதைக்களம் புதிது; முற்றிலும் புதிது. ஹாக்கி விளையாட்டின் அரசியலை வைத்தே ஒரு நாவல் படைத்திருக்கிறார் இவர். மேலும் கடுமையாக விவசாய வேலை செய்தும்

தொலைகாட்சித் தொடர் இயக்குநராக உழைத்தும் பணம் ஈட்டும் எழுத்தாளராக அறியப்படும் சரவணன் சந்திரன் இயல்பில் ஓர் எளிய மனிதர்.

சமீபத்தில் 'உடன்பாட்டு வெயில்' என்று ஒரு கவிதைத் தொகுப்பு, படித்தவர்கள் அனைவரின் கவனத்தையும் ஈர்த்திருக்கிறது. இந்த நூலாசிரியர் ஒரு கட்டுமான நிறுவனத்தில் பணிபுரிந்து வரும் தேனியைச் சார்ந்த விஜயானந்தலட்சுமி என்ற பெண்.

எனக்குத் தெரிந்த வரையில், தத்தம் எழுத்தால் மட்டுமே அடையாளமும் அங்கீகாரமும் பெற்றுள்ள சிலரைக் குறிப்பிட்டிருக்கிறேன். இந்தப் பட்டியல் விரிந்தால் எல்லையின்றி நீளும். இவையெல்லாம் இந்த இருபது ஆண்டு கால 'நவீன இலக்கியம்' கண்ட விந்தைகள்; நிஜங்கள்.

தொடங்கிய காலத்திலிருந்து சாகித்திய அகாதெமி விருதுகூட 40 ஆண்டு காலம் வரை தமிழ்ச் சமூகத்தின் மூன்று பிரிவினரிடையே மட்டும் சுழன்று சுழன்று வந்தது.மில்லனியம் ஆண்டின் கொண்டாட்டத்திற்குப் பிறகுதான் அந்த விருது எல்லா சமூகத்தையும் எட்டிப் பார்த்தது. இன்றைய பாராளுமன்ற உறுப்பினரான எழுத்தாளர் சு.வெங்கடேசனின் முதல் நாவலான 'காவல் கோட்டம்' (2008) நாவல் வெளியான மூன்று ஆண்டுகளில் சாகித்திய அகாதெமி விருதைப் பெற்றது.

கவிதைத் தொகுப்பு வெளியிடும் நோக்கத்தில் தமிழினி வசந்தகுமாரை சந்தித்த,சரக்கு கப்பல்களைக் கையாளும் நிறுவனத்தில் பணிபுரிந்து வந்த ஜோடி குரூஸின் 'ஆழி சூழ் உலகு' நாவலை 2004இல் தமிழினி பதிப்பகம் வெளியிட்டது. அந்த நாவலின் உருவாக்கத்தில் தமிழினி வசந்தகுமாருக்குப் பெரும் பங்கு உண்டு. அந்த ஆண்டு நடைபெற்ற சென்னை புத்தகக் காட்சியில் எவருடைய பரிந்துரையும் மதிப்புரையும் இல்லாமல், யார் ஒருவரின் தரவரிசைப் பட்டியலிலும் இடம்பெறாமல் வாசகர்களின் வாய்மொழி மூலமே பெரும் வரவேற்பைப் பெற்றது அந்த நாவல். ஓரிரவில் குரூஸ் என்ற உவரிக்காரர் ஊரறிந்த எழுத்தாளரானார். அவரது அடுத்த படைப்பான 'கொற்கை' நாவலுக்கு 2008இல் சாகித்திய அகாதெமி பரிசு கிடைத்தது. எழுத வந்த நான்கு ஆண்டுகளில் நாயக அந்தஸ்தைப் பெற்றார் பரதவர் வாழ்க்கையை முன் வைத்த குரூஸ். 'ஆழி சூழ் உலகு' தொடங்கி இன்றுவரை சரித்திர ஆவணங்களின் அடிப்படையில் நவீன நாவல்களைக் கட்டமைக்கும் போக்கு தொடர்ந்து கொண்டிருக்கிறது. 'காவல் கோட்டம்' இந்த வகைமையில் அடங்கும்.

இது இப்படியிருக்க, வரலாறு காணாத வகையில் 'நவீன தமிழ் இலக்கியப் பரப்பில்..' இந்தக் காலகட்டத்தில் சில அற்புதங்கள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன. 'வானம் வசப்படும்' என்று சொன்ன பிரபஞ்சன் இருதய நோய் கண்டு மரணத்தின் விளிம்பில் இருந்தபோது, அவரை நற்றிணை பதிப்பக உரிமையாளர் யுகன் உரிய நேரத்தில் உயர்தர மருத்துவமனையான அப்போலோ மருத்துவமனையில் சேர்த்தார். திரை உலகைச் சார்ந்த நடிகர் சிவக்குமார் அவரது மருத்துவமனைச் செலவு முழுவதையும் ஏற்றார். இன்னும் பலர் உதவ முன் வந்தனர். சக எழுத்தாளர்களான எஸ். ராமகிருஷ்ணனும் பவா செல்லதுரையும் டிஸ்கவரி வேடியப்பனுடன் இணைந்து பத்து லட்சம் ரூபாய் நிதி திரட்டி பிரபஞ்சனுக்கு அளித்தனர். 'தமிழால் உயிர் பிழைத்தேன்' என்று சொன்னார் பிரபஞ்சன். அவர் பாண்டிச்சேரியில் மரணமடைந்தபோது பாண்டிச்சேரி அரசு, அரசு மரியாதையுடன் அவரது உடலுக்கு இறுதி அஞ்சலி செலுத்தியது. இதைத் தொடர்ந்து கி.ராஜநாராயணன் இறந்தபோது அவருக்கும் அரசு மரியாதை செய்தது. அவருக்குச் சிலை எழுப்பவும் ஏற்பாடானது.

இறுதி மூச்சு வரை இத்தகைய கௌரவங்களையும் மரியாதையையும் எழுத்தாளர்கள் பெற்றார்கள் என்றால் அவை நிகழ்ந்த காலம் 21ஆம் நூற்றாண்டின் இணையற்ற முதல் இருபது ஆண்டுகள்தான். இவ்வளவு பெரிய வளர்ச்சியையும் அளவுக்கதிகமான வாய்ப்புகளையும் புதிய திறப்புகளையும் கண்டுள்ள இந்த 20 ஆண்டு கால தமிழ் இலக்கியத்தை வெறும் 'நவீன தமிழ்' என்று மட்டுமே அழைக்க முடியுமா?

சமஸ்கிருத மொழியைப் பற்றி பாரதி இப்படி எழுதுகிறார்: "நமது முன்னோர்கள், அவர்களைப் பின்பற்றி நாமும் கூடப் புண்ணிய பாஷையாகக் கொண்டாடி வரும் ஸமஸ்கிருத பாஷை மிகவும் அற்புதமானது. அதைத் தெய்வ பாஷை என்று சொல்வது விளையாட்டன்று. மற்ற சாதாரண பாஷைகளையெல்லாம் மனித பாஷையென்று சொல்லுவோமானால் இவையனைத்திலும் சிறப்புடைய பாஷைக்குத் தனிப் பெயரொன்று வேண்டுமல்லவா? அதன் பொருட்டே அதைத் தெய்வ பாஷையென்கிறோம்."

'தமிழைவிட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும் போது எனக்கு வருத்த முண்டாகிறது' என்று எழுதிய பாரதியார், 'சமஸ்கிருத பாஷைக்கே தனிப் பெயர் ஒன்று வேண்டும்' என்று சொல்கிறார் எனில், 'நவீன தமிழ்' வீறுபெற்று விடுதலையாகி சமத்துவம் எய்தி நிற்கிற இந்த இருபது ஆண்டு காலத்தமிழுக்கென்று தனிப்பெயர் வேண்டும் இல்லையா? அந்த வேலையை கல்விப் புலம் சார்ந்த ஆய்வாளர்கள் மேற்கொள்ளட்டும் 'இணையக் காலத் தமிழ்', 'சமத்துவ காலத் தமிழ்' என்று ஏதோ ஒரு பெயர் சூட்டப்படட்டும். ●

**சந்தியா நடராஜன்**
<sandhyapathippagam@gmail.com>

# மீண்டும் ஓர் அடைக்கலம் தேடி

எம்.டி. வாசுதேவன் நாயர்

தமிழில்: தி. இரா. மீனா

**இன்னொரு கட்ட காத்திருப்பு. ஜன்னலின் வழியே பார்த்தான். வழி எங்கும் தொடிகளும் சட்டிகளும் சிதறிக் கிடந்தன. தன் பயணத்தின் போது அவன் சேகரித்த பொருட்கள். வயல்கள் இன்னும் காலியாகவே இருந்தன. ஒரு வேளை..... அவன் பிரார்த்தித்துக் கொண்டான்.**

இன்னொரு பயணம். மீண்டும் ஓர் அடைக்கலம் தேடி. மீண்டும் அந்த ஆறு.

ஆறு கிராமத்தை நோக்கி வளைந்து திரும்புகிற இடத்தில் வெகு காலத்திற்கு முன்னால், ஒரு சுற்றுலாப் பயணியர் பங்களா இருந்ததும் காலியான தார் பீப்பாய்கள் குவிக்கப்பட்டிருந்த அந்த முற்றத்தின் விளிம்பில் புல் ஏராளமாக மண்டிக் கிடந்த காட்சியும் நினைவிற்கு வந்தது. பின்னணியில் செவ்வரளி மரத்தைச் சுற்றிப் பூத்திருந்த பூக்கள், மறையும் சூரியனின் கதிர்களைக் கிழக்கில் கூடப் பிரதிபலித்தன. இது, வெகுகாலத்திற்கு முன்னால்.

தூரத்திலிருந்து அந்த இடத்தைப் பார்த்த போது, அந்தி சிவப்பிலான செவ்வரளி பூக்கள் காணாமல் போயிருந்தன. பாதையின் வளைவிலேயே அவனால் ஆற்றைப் பார்க்க முடிந்தது. அது என்ன மாதம்? மலையாள நாட்காட்டியின் மாதங்களும் நாட்களும் பல காலத்திற்கு முன்பே அவன் மனதிலிருந்து மறைந்துவிட்டன.

ஆற்றின் மையப் பகுதியில் தண்ணீர் இருந்தது. கீழிருந்த படகு, எதிர்க்கரைக்குப் போய்விட்டது. ஒரு காலத்தில் கொதி மணலின் விரிவாக்கமாக ஆறு மாறி யிருந்ததைப் பார்த்து வருத்தப்பட்டவன் இப்போது மகிழ்ந்தான்.



சிதைந்த பழைய கோவில், தாறுமாறாக வளர்ந்திருந்த முட்செடிகளுக்கு இடையே நின்றது. காதோலைகளைப் போல இருந்த மெல்லிய முட்களோடு, வெளிர் ரோஜா நிறத்திலிருந்த அந்தச் செடிகளின் பெயரென்ன? வேலி போலப் பயன்படும் அந்தச் செடியின் பெயர் அவனுக்குத் தெரியும். தன் உடம்பில் அவை பட்டுவிடாதபடி முட்களை ஒதுக்கி, அச்செடிகளினிடையே அவன் தவழ்ந்திருக்கிறான். 'என் செடிகளை நடுவதற்காக, ஒதுக்கிய என் நேரங்கள்.. என் மாதங்கள்....' என்று நினைத்தான்.

ஆற்றுப் படுகையை ஒட்டிய சாலையில் இறங்கி நடந்தான். எதிர்புறத்தில் இருந்து ஓர் அரசாங்க ஜீப் வந்தது. செம்மண் சாலையில் தார்ரோடு போடப்பட்டிருந்தது. புழுதியேயில்லை. அதிகமான ஜனங்களோடு கூடிய ஒரு பஸ் அவனைக் கடந்தது.

அவன் வழி தவறிவிட்டானா? அரச மரம் அங்கில்லை; தலைச் சுமையை இறக்கி வைப்பதற்காகப் போடப்பட்டிருந்த கல் பெஞ்சும் அங்கில்லை. அந்தியில் வயலை விட்டு வரமறுக்கும் தெரு ஆடுகளும் இல்லை.

படகு மறுபக்கம் திரும்பிப் போவதைப் பார்த்த ஒருவர், அவனிடம் வந்தார்: "அனிதா போய்விட்டாளா?"

யார் அனிதா? அவனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

"கே.பி.டி. பஸ் இல்லை. அனிதா கொஞ்சம் சீக்கிரம் வரும்" என்று யாரோ சொன்னார்கள்.

பஸ்ஸைப் பற்றிப் பேசுகிறார் என்று புரிய அவனுக்குச் சில கணங்களானது.

"எனக்கு தெரியாது."

அறிமுகமில்லாத பல முகங்களைக் கடந்து, ஆற்றின் இரண்டாம் வளைவிலுள்ள சிறிய பஜாரை அடைந்தான். கிழக்கு வானத்திலிருந்து உறுமல் சத்தம் எழுவதைக் கேட்டான். மூடியிருந்த



ஒரு சிறிய கடை அருகே நின்று அந்த சத்தத்தைக் கூர்மையாகக் கவனித்துக் கேட்டான். மீண்டும் வானில் மெதுவான சத்தம்.

"வடக்குப் பருவமழை, விருச்சிகம் மாத நடுவிலா ?" கிழக்கு வானத்தை பார்த்துக் கொண்டிருந்த ஒரு முதியவர் கேட்டார். யாரும் பதில் சொல்லவில்லை, அவர் பதிலை எதிர்பார்க்கவுமில்லை.

அந்தக் குறுகிய சந்தில் இருள் படர்ந்தது. விளக்குக் கம்பங்களும் தெரு விளக்குகளும் இப்போது வந்திருக்கின்றன. ஆனால், யாரும் அவற்றை போடவில்லை. கூரை வேயப்பட்டிருந்த சில கடைகளிலிருந்து இங்கும் அங்குமாய் சில மஞ் சள் விளக்குகள் லேசாய் மின்னின. மூடியிருந்த கடையின் வெளி வராந்தாவிற்குள் நுழைந்து, அங்கிருந்த மரக்கட்டையில் சாய்ந்து நின்றான். இரண்டு பக்கங்களிலும் உள்ள கடைகளுக்கு வந்து போகிறவர்கள் யாரும் அவனைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவன் மேலே நடக்க முடிவு செய்தான். இந்தச் சாலை எங்கே முடிகிறது? சொல்லுங்களேன், எங்கே முடியும்?

ஒரு காலத்தில் அவனுக்கு அது தெரியும். ஆனால், அந்தச் சாலை இப்போது மாறியிருந்தது. முகங்கள் மாறி இருந்தன. அவனைக் கடந்து நடந்தவர்களில் மூன்று அல்லது நான்கு பேர் நின்று திரும்பி அவனை கவனித்தார்கள். அவனருகில் தயக்கத்தோடு வந்தார்கள். "ஒரு வழிப்போக்கர்", என்று அவர்களில் யாரோ ஒருவர் சொல்வதை அவனால் கேட்க முடிந்தது.

"யாரது?"

அவன் புரியாத வகையில் முனகினான்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?"

பதிலை எதிர்பார்க்காமல், "இன்று பஸ் எதுவுமில்லை" என்று அவர்களில் ஒருவர் சொன்னார்.

அவன் தொலைந்த தன் குரலையும் வார்த்தைகளையும் மீட்டான்: "எனக்கு ஓர் இடம் வேண்டும்" என்றான்.

ஓர் இடம்.

அவர்கள் சிறிது தள்ளி நின்று, தங்களுக்குள் மிக மெல்லிய குரலில் பேசினார்கள். பின்பு அவனருகே வந்தனர்.

"வழிப்போக்கர்கள் தங்க...." மீண்டும் அங்கே அமைதி. "இங்கு ஹோட்டல்கள் எதுவுமில்லை. இது நகரமில்லை."

"இங்கிருந்து நான்கு மைல் தொலைவில் ஒரு பயணிகள் பங்களா இருக்கிறது."

"நான் விசாரித்தேன், அது காலியாகயில்லை" என்றான் அவன்.

குரல் ஏதாவது வித்தியாசமாக ஒலித்ததா? அவர்கள் ஆச்சரியத்தோடு அவனது அடுத்த வார்த்தைக்காகக் காத்திருப்பது போலிருந்தது.

"எனக்கு வாடகைக்கு இடம் வேண்டும்."

"எவ்வளவு நாட்கள்?"

"சில நாட்களுக்கு. எத்தனை நாட்கள் வேண்டுமென்று.... எனக்கே சரியாக தெரியவில்லை."

அறியும் ஆர்வம் வெளிப்பட, இப்போது கிராமவாசிகளின் முகத்தில் லேசாக ஒரு மரியாதை தெரிந்தது.

"நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்று எங்களிடம் சொல்லவில்லையே?"

பதில் சொல்வதற்கு பதிலாக அவன் ஒருவித சப்தம் எழுப்பினான். தைரியமானவர் போல தோற்றமளித்த ஒருவர் அவனருகில் வந்தார். அவன் தோளிலிருந்த பையை அவர் கண்கள், அந்த இருட்டிலும் ஆழமாய் ஊடுருவின.

"உங்கள் சாமான்கள்?"

"அவை விரைவில் வரும்."

அவர்கள் தங்களுக்குள்ளே ரகசியமாகப் பேசிக் கொண்டார்கள். பல குரல்கள்.

"விற்பனை இன்ஸ்பெக்டராக இருக்க வேண்டும். கொத்தம்மாவிடம் கவனமாக இருக்க சொல்ல வேண்டும்."

"இல்லை. சி.ஐ.டி. அதிகாரியாக இருக்க வேண்டும். அப்படியெனில்...."

"ஒரு வழிப்போக்கனை நம்பி விடக்கூடாது. இந்த நாட்களில் திறமையான கொள்ளையர்கள்..."

"திருடர்கள் இவ்வளவு தைரியமாக இருப்பார்களா?"

கிராமவாசிகள் அருகில் வந்தார்கள்.

"உங்களுக்கு வீடா வேண்டும்? ஒரு நாள், இரண்டு நாள் என்றால்.."

"எனக்கு ஒரு வீடு வேண்டும்."

என்னைச் சுற்றி ஒரு வீட்டின் சுவர்கள் சூழ்ந்திருக்கும். படுத்துத் தூங்குவதற்கு ஒரு தரை. வானத்திற்குக் கீழே ஒரு சிறிய கூரை.

"ஏமானின் எஜமானனின் வீடு மட்டும் காலியாக இருக்கிறது. அவருடைய மானேஜர் இப்போதுதான் புறப்பட்டுப் போனார்."

"ஏமானா? யார் அது?"

அவர்கள் ஆச்சர்யமடைந்தனர்.

"உங்களுக்கு தர்மன் முதலாளியைத் தெரியாதா? என்ன அதிசயம்?"

தர்மன். அவன் அந்தப் பேரைக் கேள்விப்பட்டதே யில்லை. அப்பு, அப்பா, அப்புண்ணி, குட்டி நாராயணன், குட்டி சங்கரன்.. பழைய பெயர்கள் எல்லாம் மாறிவிட்டன.

தர்மன் யாராக இருக்கும்?

"நீங்கள் முதலாளியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்க வேண்டும்."

அவன் முணுமுணுத்தான். அந்தச் சத்தம் எந்த அர்த்தத்தையும் தரலாம்.

"அவரைப் பற்றிய கேள்விப்படாதவர்கள் என்று யாருமிருக்க முடியாது. அவர் செல்வந்தர்."

யாரோ விளக்கு கொண்டு வந்தார்கள். அருகிலுள்ள ஒரு கடையிலிருந்து இரண்டு பேர் உட்காரக்கூடிய பெஞ்சை ஒருவர் கொண்டு வந்தார்.

"உட்காருங்கள்."

வேறு யாருக்கோ தங்குவதற்கான இடம் பற்றிப் பேசுகிறார்கள் என்ற பாவனையில், அவன் விருப்பமில்லாமல் அவர்கள் பேசுவதை கவனித்து கொண்டிருந்தான். திருமேனியின் அவுட் ஹவுசிலிருந்து மானேஜர் வெளியே வந்ததை பார்த்ததாக ஒருவர் சொன்னார். அவர்கள் அனுப்பி வைத்த முதல் மனிதர் திரும்பி வந்து தான் செய்தியைச் சொல்லிவிட்டதாக சொன்னார். சிறிது நேரத்திற்குப் பின்பு இரண்டாவது மனிதர் பதட்டத்தோடு வந்து "அவர் வருவார், மானேஜர் வருவார்" என்றார். அப்படியானால் அவன் ஏமானைப் பார்க்க வேண்டாமா?

"நீங்கள் அவரைப் பிறகு பார்க்கலாம்."

பின்பு அவர்கள் கிராமத்தைப் பற்றிய குறைகளை அடுக்கினார்கள். வழிப்போக்கர்கள் வந்தால், அவர்களுக்கு சாப்பிட ஹோட்டல்களில்லை. அவர்கள் தூங்க இடமில்லை. பயணிகள் பங்களாவில் எப்போதும் ரெவென்யு அல்லது அரசு அதிகாரிகள்தான் தங்கியிருப்பார்கள். அவை மட்டுமில்லை. அனிதா பஸ் சர்வீஸ் இருக்கிறது. ஒரு நாள் கூட அது சரியான நேரத்திற்கு வந்ததில்லை.

ஒரு எதிர்பாராத கேள்வி அவனைத் தாக்கியது. "நீங்கள் ட்யூட்டியில் வந்திருக்கிறீர்களா, இன்ஸ்பெக்டர்?"

அவன் தன்னைக் குனிந்து பார்த்துக் கொண்டு, தனக்குள்ளே மிக மென்மையாக சிரித்தான். வேர்வை நிறைந்த, சாயம் போன ஆடைகள். இன்ஸ்பெக்டர், சூபர்வைசர், மேற்பார்வையாளர், கிராமவாசிகள் அவன் பதவியை நிமிடத்திற்கு நிமிடம் மாற்றிக் கொண்டிருந்தார்கள். விசாரணை செய்யத்தான் அவர்கள் வந்திருக்கிறார்கள். தன் முகத்தை முழுவதுமாக மாற்றிக்கொண்ட மண்ணின் முகத்தில், தெரியாத பாதைகளைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள்

அவனுக்காக அவர்கள் பேசினார்கள், அவன் சார்பில் முயற்சிகள் எடுத்தார்கள். அவன் காத்திருந்தான். இப்படிக் காத்திருப்பது அவனுக்குப் புதியதில்லை, யாராவது வந்து அவனுக்கு தெரியாத ஏதாவது ஒன்றைக் காட்டுவார்கள். இப்போது அவன் ஒரு பார்த்தேயிராத வாடகை வீட்டிற்காக, முதலாளியிடம் வேலை பார்க்கும் மானேஜருக்காகக் காத்திருக்கிறான்.

தெற்கிலிருந்து ஒரு நாய் ஓடிவந்து, அங்கிருந்தவர்களை முகர்ந்தது. பின் அவனருகே வந்து, நிச்சயமின்றி நின்றுவிட்டு, வடக்கு திசையைப் பார்த்து ஓடியது.

கடைசியில் ஒருவழியாக மானேஜர் வந்தார். அவன் மீண்டும் பல கேள்விகளுக்கு பதில் சொல்லியாக வேண்டும்.... பதில் தெரியாத கேள்விகளுக்குத் தடுமாறியாக வேண்டும் என்னும் பயம் அவனுக்கு.

அரிக்கேன் விளக்கு சாலையின் இருட்டைக் கிழிக்க, மானேஜர் அவனை நோக்கி நீண்ட எட்டுகள் எடுத்துவைத்து வந்தார். கூடியிருந்தவர்கள் அவருக்கு மரியாதை காட்டும் வகையில் ஒதுங்கி நின்றனர்.

"என்னிடம் சாவி இருக்கிறது," மானேஜர் எல்லாரையும் பார்த்து சொன்னார்.

அவர்கள் ஆச்சர்யமடைந்தனர்: "நிஜமாகவா? உங்களால்தான் அது முடியுமென்று எங்களுக்குத் தெரியும்."

"கிராமத் தலையாரி போய்விட்ட பிறகு, அந்த வீட்டை வாடகைக்கு விடப் போவதில்லை என்று அவர் அந்த இடத்தை இழுத்து மூடிவிட்டார். எவ்வளவு பேர் விசாரித்திருக்கிறார்கள்! அவர் கேட்பாரா? உங்கள் சாமான்கள்....?"

"அவை விரைவில் வரும்." கிராமவாசிகள் பதிலளித்தனர்.

"மாடியில் எலிகளும் வௌவால்களும் நிறைந்திருக்க வேண்டும். கீழ்ப்பகுதி அவ்வளவு மோசமாயிருக்காது."

"ஒருவருக்கு அவ்வளவு இடம் தேவையிருக்காது." கிராமவாசிகள் சொன்னார்கள்.

"சாமான்கள் கொண்டு வரும் ஆட்களுக்கு வழி தெரியுமா?" கேள்விக்கு அவன் பதில் சொல்லவில்லை.

கிராமவாசிகள் உதவிக்கு வந்தார்கள். "கடைக்காரர்கள் உதவியோடு நாங்கள் ஏற்பாடு செய்கிறோம்."

நல்லது.

அவன் மானேஜரின் கையிலிருந்த விளக்கொளியைத் தொடர்ந்தான். நான்கு கிராமவாசிகள் அவனைத் தொடர்ந்தனர். மோப்பமிட்டு மீண்டும் தம்மை நோக்கி ஓடிவந்த நாயை ஒருவர் விரட்டினார். வயலை கடக்கும் பாதைகள் ஈரமாயிருந்தன. வானத்தில் மீண்டும் உறுமல். வெளிச்சத்தில் இருள் மறைய, திறந்த வெளியில் நடந்து, அவர்கள் பூட்டிய வீட்டை அடைந்தனர்.

சித்திரப் பதிவு ஒரு காலத்தில் மரக் கதவில் இருந்திருப்பதை அவன் மங்கிய ஒளியில் உணர்ந்தான். மானேஜர் கதவைத் திறந்தார். வலியில் தாழ்ப்பாள் கீரிச்சிட்டது.

"பொறுங்கள். உள்ளே ஒரு லாந்தர் இருக்க வேண்டும்."

அரிக்கேன் விளக்கோடு மானேஜர் உள்ளே போனார். உள்ளே பல கதவுகள் திறக்கும் சப்தம் கேட்டது. பிறகு மாடிப்படிகள் கீரிச்சிட்டன. மானேஜர் இன்னொரு லாந்தரை ஏற்றி வந்து முகப்பில் வைத்தார்.

"உங்கள் சாமான்கள்?"

"வரும்." கிராமவாசிகள் சொன்னார்கள்.

"சாப்பாடு."

"நான் வரும் வழியில் கொஞ்சம் சாப்பிட்டு விட்டுத்தான் வந்தேன்."

"கிணறு இங்கேயிருக்கிறது, வாளியும் இருக்கிறது," மானேஜர் சுட்டிக் காட்டினார்.

அதற்குப் பிறகுதான் நீண்ட நேரம் அங்கு தனியாக இருப்பது போல உணர்ந்தான். இருட்டான வீடு, புகைகிற அரிக்கேன், துருப்பிடித்த சாவி ஆகியவை அவன் வசமாகி விட்டன. உச்சியிலிருந்து விழுந்த கரையான் அரித்த மரத்துளை ஊதி விட்டு, தலையை

முழங்கையில் வைத்துப் படுத்துக்கொண்டு,வெளியில் தெரிந்த இருட்டை வெறித்தான்.

வாடகை மற்றும் பிற விஷயங்களை விவாதிக்க அடுத்த நாள் வருவதாக உறுதி சொல்லிவிட்டு மானேஜர் விடை பெற்றார். வெகு தொலைவாக தெரிகிற நாளைய தினத்தில் நடக்கப் போகும் ஒரு சந்திப்பு. மறந்துவிடலாம் அவன் நினைத்தான். கடைசியில் அவனுக்கு ஒரு வீடு கிடைத்து விட்டது. வௌவால்கள் மாடியில், கதவுகளை அரித்து பொடியாக்கிய கறையான்கள் கீழே. அலைந்து திரிந்த நாட்களில் அவன் கற்பனை செய்து வைத்திருந்த அடைக்கலம் தரும் ஒரு வீடு. ஆமாம், என் சிநேகிதர்களே, இங்கே நானும் அடைக்கலம்.

காலையில் பஜாரில் முதலில் திறக்கப்படுகிற தேநீர்க் கடையில், ஜனங்கள் அந்த வழிப்போக்கனைப் பற்றி அறியும் ஆர்வத்துடன் கூடியிருந்தனர்.

புதியதாக வாடகைக்கு வந்திருக்கும் அந்த நபரைப் பார்க்க வருகிற மானேஜருக்காக காத்திருந்தனர். வாடகையைப் பற்றி அவர் எதுவும் பேசியதாகத் தெரியவில்லை. கடனாளியாக ஆகி விட விரும்பவில்லை எனச் சொல்லி அவன் முன் பணத்தைக் கொடுத்துவிட்டான். வீட்டை சுத்தம் செய்ய ஆட்களைத் தேட வேண்டும்.

“ஏமான் தனி மனிதர் யாரையும் தொந்தரவு செய்யமாட்டார். ஆனால்,சில சமயங்களில் கிறுக்கன் போல நடந்துகொள்வார். சில சமயங்களில் வீட்டை யாருக்கும் வாடகைக்கு விடப்போவதில்லை என்பார், சில சமயங்களில் வீட்டை இடித்து விட்டு புதியதாகக் கட்ட வேண்டுமென்பார். சில சமயங்களில்....” இப்படி மானேஜர் சொல்லிக்கொண்டே போனார்.

“எஜமான் எப்போதும் அப்படித்தான்,” கிராமவாசிகள் ஒப்புக்கொண்டனர்.

புதியதாக வந்திருக்கும் மனிதனைப் பார்த்து விடவேண்டும் என்ற எண்ணத்தில் மனிதர்கள் வீட்டிற்குள்ளே வராமல் அந்த வீட்டைச் சூழ்ந்து நின்றனர்.

முற்றம் சுத்தம் செய்யப்பட்டு விட்டது. வேலி உயரமாக இருக்கவேண்டும் என்று சொல்லி வேலையாட்கள் பழைய செவ்வரளி மரங்களை அப்புறப்படுத்தி விட்டு புதிய கன்றுகளை நட்டனர். பையிலிருந்து சாக்கை எடுத்து அவன் தரையைத் துடைத்துவிட்டு அதைக் காய வைப்பதை பார்த்ததும், “உங்கள் சாமான்கள் வந்து விட்டதா?” என்று கேட்டனர்.

“வந்துவிட்டது.”

அவன் சொன்னதும் அந்த பதிலில் திருப்தியானவர்களாக அவனை பார்த்துசிரித்துவிட்டு, அவர்கள் போனதில் நிம்மதியானான். சாமான்கள் எப்போது அல்லது எப்படி வந்தன என்று யாரும் கேட்கவில்லை.

அடுத்த கட்ட கிராமவாசிகள் வருவதற்கு முன்னால் அவன் சிலந்திக் கூடுகளை நீக்கி, ஒட்டடை அடித்துச் சுத்தம் செய்தான். சந்தைக்குப் போயிருந்த வேலையாட்கள் மளிகைச் சாமான்களோடும் வீட்டிற்குத் தேவையான பொருட்களோடும் திரும்பினார்கள். வௌவால்களை விரட்டினார்கள்.

ஜன்னல்களில் இருந்த பனையோலைகளை நீக்கிய பிறகு வீட்டிற்குள் வெளிச்சம் பரவியது. ஊசல் வாடை மெல்ல மெல்ல மறைந்தது. உடைமையாளன் என்ற பெருமிதத்தில் அவன் வீட்டிற்குள்ளும் வெளியேயும் நடந்தான்.

தன் பயணத்தை தொடங்கிய நாளில் அவன் தூங்கிய அந்த அறையின் ஞாபகம் மெல்ல மங்கிப் போயிருந்தது. வேலையை முடித்து விட்டு களைத்து படுத்த போது அதை நினைவில் கொண்டு வர முயன்றான். பானை செய்யும் சக்கரத்தோடு சுற்றுவதால் மென்மையாகத் தெரியும் ஈரக் களிமண் சட்டிகள், சூளையின் எரியும் மணம், எங்கு பார்த்தாலும் விதவிதமான களிமண் வடிவங்கள், சாணி மணத்தோடு ஒரு பூ, சிறுநீர் சேரும் சாக்கடை துர்நாற்றம், எப்போதும் கண்ணில் படும் எரியும் சூளை.... அந்த அறையிலிருந்துதான் அவன் தன் பயணத்தை ஆரம்பித்திருந்தான்.

புழுதிகளிலும் காய்ந்த இலைகளிலும் நடந்த அவனது பாதங்கள் எந்த சுவட்டையும் கடந்த காலங்களில் ஏற்படுத்தவில்லை. அதற்குப் பிறகு.. ஒழுகும் மழைத் தண்ணீரோடு கூடிய வராந்தாக்கள், புழுதியும் வேர்வையும் சேர்ந்த கரையான பெஞ்சுகள், முடிவற்ற பாதைகள், கொடூரக் கனவுகள்..

மாலையில், வேலையாட்கள் கொண்டு வந்திருந்த ரோஜாக் கன்றுகளை முற்றத்தில் நட்டான். புதிய தொட்டிகளை இருட்டு விலகிய அறைக்குள் வரிசையாக வைத்தான். ராத்திரி மானேஜர் லாந்தரோடு வந்தார்.

“நன்றாக இருக்கிறீர்களா?”

“உம்.”

“எந்த தொல்லையும் இல்லையே?”

“இல்லை.”

முற்றமும் காம்பவுண்டு பகுதியும் சுத்தப்படுத்தப்பட்டிருப்பதை பார்த்து கொஞ்சம் பயந்தார். யாருக்கோ சொந்தமான ஓர் இடம். ஏமான் அவனை காலி செய்யச் சொன்னால் செய்து விடவேண்டும். அதனால் அவன் பணத்தை வீணாகச் செலவழிக்க வேண்டாமென்று மானேஜர் சொன்னார். அவர் புறப்பட்டுப் போனதும் அவன், ‘நான் காலி செய்யமாட்டேன், இந்த வீட்டை



விடமாட்டேன்' என்று தனக்குள் உறுதியாக சொல்லிக்கொண்டான்.

சுற்றியுள்ளவர்களோடு நட்பு கொண்டான். வேலியின் அருகேயுள்ள மூங்கில் கொத்தில் உள்ள மஞ்சள் பறவைகளை அவனால் அடையாளம் காண முடிந்தது. பாக்குச் செடியினருகே வந்து புல்லைக் கொத்துகிற அந்தச் சிறு பறவைகளும் அவனை அடையாளம் காணத் தொடங்கி இருந்தன. என்ன அதிசயம், தூக்கணாங் குருவிகள் மேற்கு பக்கத்து அறையில் கூடு கட்டத் தொடங்கியிருந்தன. சுவர்க் கோழியின் ஒலி இரவு நேரத்தில் தாளத்தோடு ஒலிப்பது போலிருந்தது.

"எவ்வளவு நாட்கள் இந்த வீட்டில் இருக்க முடிவு செய்திருக்கிறீர்கள்?"

கிராமவாசிகளில் ஒருவர் கேட்டார்.

"நான் இங்கிருந்து போகப் போவதில்லை." அவன் அமைதியாக சொன்னான்.

அவர்கள் அதிர்ந்தனர்.

"எல்லாத் தூண்களும் ஆட்டம் கண்டுவிட்டன. அவர்கள் இதை இடித்து விட்டு புதியதாக கட்டப் போகிறார்கள்." ஏமானையும் மானேஜரையும் அறிந்த ஒருவர் சொன்னார்.

தன் அமைதியின்மையை மறைத்துக்கொண்டு அவன் முணுமுணுத்தான்.

"இது யாருக்கும் பிடிக்காத ஓர் இடம்.. இப்போது ஒருவர் வாடகைக்கு என்று வந்திருக்கிறார். எஜமானனுக்கு கொஞ்சம் கஷ்டம்தான்" என்றார் ஒருவர்.

மழை பெய்வதற்கு முன்னால் மானேஜர் வந்தார். ஏமான் மேல் கூரை வேயப் போவதில்லையெனவும் ஒழுகி, விழுந்தாலும் பரவாயில்லை என்று சொன்னதாகவும் சொன்னார்.

மானேஜர் முன் பணத்தை வாங்கிக்கொள்ளத் தயாராகஇல்லை. ஆனால், அவன் அதைக் கொடுத்து விடுவதில் உறுதியாக இருந்தான்.

மழை தொடங்கிவிட்டது. காற்று விசில் ஒலியோடு வயல்களில் பரவி, பாக்கு தோட்டத்திற்கும் வந்தது. மழை பெரியதாகி, வடிகால்களில் நீர் சேர்ந்தது. வாழை மரங்களும் பாக்கு இலைகளும் காற்றில் நடுங்கி, நீரில் மூழ்கின. மழைத் தண்ணீர் இடிந்த மண் சுவர்களின் விரிசல்களைப் பொத்துக்கொண்டு வீட்டிற்குள் பொங்கி வருவதை வீட்டிற்குள் உட்கார்ந்தபடி அவன் பயத்தோடு பார்த்தான்.

வீட்டுச் சொந்தக்காரர் விரும்பியதைப் போல எல்லாம் இடிந்து நொறுங்கப் போகிறதா? வராந்தா முழுவதும் வைக்கோல் சிதறியது. கூரையின் இடைவெளிகளிலிருந்து கறைபட்ட சிவப்பு நீர் கொட்டியது. மழையில் அவன் வெளியே போய், களிமண்ணை உருண்டையாக்கி சுவர்களில் தெரிந்த விரிசல்களை அடைக்க முயற்சித்தான். கூரை யிலிருந்து கொட்டும் நீரைப் பிடிக்க வரிசையாக பானைகளையும் தொட்டிகளையும் வைத்தான். காற்றின் வேகத்தால் உள்ளே வந்த நீரை துடைத்தான்.

அந்தச் சீற்றமான மழை ஒரு வழியாக நின்றது. காற்றின் கடைசி மூச்சு குழந்தையின் சிணுங்கலாய் இழைந்து நின்றது.

மானேஜர் திரும்பவும் வந்தார். அவர் சிரிக்கவோ அல்லது உட்காரவோ இல்லை. 'இங்கே பாருங்கள், நான் ஓட்டைகளை அடைத்துவிட்டேன். கூரையைச் சரி செய்துவிடுவேன். இந்தப் பழைய வீடு இடிந்து விடாமல் பார்த்துகொள்வேன். நான் காலி செய்யமாட்டேன்' என்று முகத்தை கடுமையாக வைத்திருந்த அந்த மனிதனிடம் அவன் சொல்ல விரும்பினான்.

யாரிடமோ கோபம் கொண்டவர் போல மானேஜர் உட்கார்ந்திருந்தார்,

குடிசைப் பகுதிகளிலுள்ள வேலையாட்களை அவர் அழைத்து வரப் போயிருந்த நேரத்தில், அருகிலுள்ள பனை மர ஓலைகளைப் பறித்து கூரையின் இடைவெளிப் பகுதிகளை அடைத்து விட்டான். மழையின் தாக்கத்தால் சூரிய ஒளி இன்னும் ஈரமாகவே இருந்தது.

"நீங்கள் இந்த வீட்டை விட்டு போய் விட வேண்டுமென்று ஏமான் சொல்கிறார். இந்தாருங்கள், நீங்கள் தந்தது" என்று கையிலிருந்த பணத்தை அவனை பார்க்காமலே தந்தார், மேனேஜர். அவன் அதை வாங்கவில்லை.

"இது என்னுடைய தவறில்லை. எஜமானனின் இயற்கை அதுதான். அவர் யார் சொல்வதையும்

கேட்க மாட்டார்.”

மானேஜர் பணத்தை இருக்கையில் வைத்துவிட்டுக் கிளம்பினார். கேட் அருகே சென்று திரும்பிப் பார்த்தார்.

“நீங்கள் போய் விடுவது நல்லது. உங்களால் வேறு என்ன செய்யமுடியும்? ஏமானின் விருப்பத்திற்கு மாறாக யாரும் நடந்து கொண்டதேயில்லை.”

கிராமவாசிகள் வந்தார்கள். அவர்களும் அவன் கண்களைப் பார்க்கவில்லை. ஆனால், அவர்கள் முகத்தில் இரக்கம் தெரிந்தது.

“நீங்கள் போவது எங்களுக்கு வருத்தம் தருகிறது. வேறு என்ன செய்ய முடியும்? இது எஜமானனின் வீடு. அவர் சொல்லும் போது நீங்கள் போய்த்தான் ஆகவேண்டும்.”

மூன்று நாட்கள் கழித்து மானேஜர் வந்தார். “உங்கள் பொருட்களை வெளியே எடுத்து வீசிவிட்டு, உங்களை வெளியேற்றப் போகிறார்கள். எனக்கு எதுவும் தெரியாது. நான் போகிறேன்.”

அவன் உள்ளேயிருந்த சிறிய அறைக்குப் போனான். கதவைத் தாளிட்டுக் கொண்டான். அவர்கள் வருவார்கள், தர்மன் முதலாளியின் வேலைக்காரர்கள் வருவார்கள். அவன் விளக்கை ஏற்றவில்லை. வயல்களுக்கிடையேயான பாதைகளை அவனால் ஜன்னலின் வழியாகப் பார்க்க முடிந்தது. ஜன்னலை இழுத்து மூடினான். மிக மிகப் பக்கத்தில் வந்த குரல்களைக் கேட்க முடிந்தது.

‘யாரது?” என்ற தொடக்கம். அவர்கள் ஏமானின் பணியாட்கள்.

அவன் எதுவும் சொல்லவில்லை. முழுங்குவதைக் கூட கடினமாக உணர்ந்தான். தொட்டிகளும் சட்டிகளும் வீசியெறியப்படும் சப்தம் கேட்டது. பின்பு வீட்டை உடைக்கும் சப்தம்.

“நாங்கள் உங்களுக்கு எதிரானவர்களில்லை. எஜமானன் செய்யச் சொன்னதைச் செய்கிறோம். அவ்வளவுதான். நாங்கள் கூரையைப் பிய்த்து கொண்டிருக்கிறோம். பிறகு சுவர்களை உடைப்போம். கடைசியில் நீங்கள் உட்கார்ந்திருக்கும் அறையின் சுவரை உடைப்போம். ஏமான் வரும் வரை நீங்கள் அங்கே உட்கார்ந்திருக்கலாம்.”

“அவர் வருவாரா?”

“அவர் வருவார். வருகிறேன் என்று சொன்னால் வருவார், அவர் வருவார்.”

இன்னொரு கட்ட காத்திருப்பு. ஜன்னலின் வழியே பார்த்தான். வழி எங்கும் தொடிகளும் சட்டிகளும் சிதறிக் கிடந்தன. தன் பயணத்தின் போது அவன் சேகரித்த பொருட்கள். வயல்கள் இன்னும் காலியாகவே இருந்தன. ஒரு வேளை..... அவன் பிரார்த்தித்துக் கொண்டான்.

‘எஜமானன் தன் மனதை மாற்றிக்கொள்ளலாம். நான் அவரை எஜமானன் என்றே அழைப்பேன். நான் எப்போதும் அப்படியே அழைப்பேன். அவர் முன்னால் விழுந்து வணங்குவேன். அடைக்கலம் தாருங்கள். நான் கண்டுபிடித்த கடைசியான அடைக்கல இடம் இது. என்னால் பொறுக்க முடியாது. அழுக்கான உடைகளோடு, ஒரு முடிவில்லாமல் பயணிகள் காத்திருக்கின்றனர். அறைகள் மிக மோசமான நாற்றத் தொகுப்பாக, வியர்வை வேகத்தோடு. சூளைகளின் எரியும் மணம். என்னால் போக முடியாது, அங்கே திரும்பவும் என்னால் போக முடியாது.’

தனக்குள் முணுமுணுத்துக் கொண்டவனாக, இன்னமும் நின்று கொண்டிருந்த நான்கு சுவர்களை உள்ளடக்கிய அறைக்குள் நடந்து கொண்டிருந்தான்.

பாருங்கள், மண் படிந்த மழை நீர் இனி ஒருபோதும் கூரையின் இடையே நுழையாது. மழையும் காற்றும் பனைக் கூரையின் வழியாக வராது ஷபாருங்கள்.

அமைதியாக இருக்கும்படி தனக்குத்தானே எச்சரித்துக் கொண்டு அவன் படுத்தான். மாலை வெளிச்சம் மங்கத் தொடங்கிய போது, அவனுக்கு நடுக்கம் ஏற்பட்டது. எஜமானனைப் போல இருட்டு அவனுக்குள் படர்கிறதா?

ஓடிப்போவதற்கு எந்த இடமுமில்லை. அந்த சப்தம் எங்கேயிருந்து வருகிறது? அவை குளம்புகளா அல்லது மனிதக் காலடிகளின் ஒலியா? ஆடு, மாடுகள் வீட்டிற்குத் திரும்புகின்றனவா? அழுக்கான உடைகள் ஒரு மூட்டையாக நெஞ்சைச் சுற்றியிருக்க அவன் காத்திருந்தான்.

அச்சம் தரும் சப்தங்கள் அவனருகே நெருங்கிய போது அவன் பயமாக உணரவில்லை. முதல் படி, வராந்தா என கனமான காலடிகள் அருகே கேட்டன. அந்த மூட்டையை தலையில் வைத்துக் கொண்டு, கண்களை மூடிக்கொண்டு படுத்தான். உள்ளே வரும் வழியைக் காண்பிக்கும் கதவுகள் திறக்கப்பட்ட போது, அவை அழுவதாகத் தெரிந்தன.

‘வாருங்கள், எஜமானனே, வாருங்கள்.’ ●

---

ஆங்கிலம் வழி தமிழில் மொழி பெயர்க்கப்பட்டது. மலையாளத்திஇல் இருந்து ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பு: வி. அப்துல்லா; Kuttiedathi And Other Stories, Orient Black Swan

**“தி.இரா. மீனா”** <meenmix@yahoo.com>

#  அம்ருதா பதிப்பகம் வெளியீடுகள்

முத்துக்கள் பத்து வரிசை நூல்கள்
சிறந்த எழுத்தாளர்களின் தேர்ந்தெடுத்த 10 சிறுகதைகள்

**பி. எஸ். ராமையா**
பக். 80, விலை ரூ. 50

**புதுமைப்பித்தன்**
பக். 48, விலை ரூ. 30

**ந. பிச்சமூர்த்தி**
பக். 80, விலை ரூ. 50

**எம். வி. வெங்கட்ராம்**
பக். 64, விலை ரூ. 50

**லா. ச. ரா**
பக். 80, விலை ரூ. 50

**கல்கி**
பக். 96, விலை ரூ. 60

**தி. ஜ. ர**
பக். 80, விலை ரூ. 50

**தி. ஜானகிராமன்**
பக். 96, விலை ரூ. 60

**ஜெயகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**கு. அழகிரிசாமி**
பக். 96, விலை ரூ. 60

**அசோகமித்திரன்**
பக். 64, விலை ரூ. 40

**சா. கந்தசாமி**
பக். 112, விலை ரூ. 70

**ஆ. மாதவன்**
பக். 80, விலை ரூ. 50

**ஆதவன்**
பக். 96, விலை ரூ. 60

**பிரமிள்**
பக். 96, விலை ரூ. 60

**வண்ணநிலவன்**
பக். 64, விலை ரூ. 40

**வண்ணதாசன்**
பக். 64, விலை ரூ. 40

**நாஞ்சில்நாடன்**
பக். 80, விலை ரூ. 50

**ராஜம் கிருஷ்ணன்**
பக். 112, விலை ரூ. 70

**விட்டல்ராவ்**
பக். 64, விலை ரூ. 40

**பா. செயப்பிரகாசம்**
பக். 160, விலை ரூ. 100

**நீல. பத்மநாபன்**
பக். 80, விலை ரூ. 50

**தமிழ்ச் செல்வன்**
பக். 64, விலை ரூ. 40

**கந்தர்வன்**
பக். 80, விலை ரூ. 50

**கோணங்கி**
பக். 64, விலை ரூ. 40

**சூர்யகாந்தன்**
பக். 64, விலை ரூ. 40

**ஜெயந்தன்**
பக். 160, விலை ரூ. 100

**மொழிபெயர்ப்பு நாவல்கள்**
**மிருகங்களின் பண்ணை**
ஜார்ஜ் ஆர்வெல்
பக். 120, விலை ரூ. 75

**பாரதிபுரம்**
யு.ஆர். அனந்தமூர்த்தி
தமிழில்: தி.சு. சதாசிவம்
பக். 240, விலை ரூ. 150

**பிறவாத குழந்தைக்கு ஒரு கடிதம்**
ஓரியானா ஃபேலஸி
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**பெண்ணே கேள்**
கிருஷ்ணா ஸோப்தி
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 112, விலை ரூ. 70

**சிதைந்தகூடு**
தாகூர்
பக். 80, விலை ரூ. 50

**நெருப்பு நிலா**
வாசி ரெட்டி சீதா தேவி
பக். 160, விலை ரூ. 100

**ஒரு லாரி டிரைவரின் கதை**
சிங்கிஸ் ஐத்மாத்தவ்
தமிழில்: தா. பாண்டியன்
பக். 128, விலை ரூ. 80

**மாயாபுராணம்**
பி. சுரேந்திரன்
தமிழில்: திலகவதி
பக். 144, விலை ரூ. 90

**மொழிபெயர்ப்பு சிறுகதைகள்**
**சல்வடார் டாலி**
உலகச் சிறுகதைகள்
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 192, விலை ரூ. 120

**குதிரில் உறங்கும் இருள்**
பாப்லோ நெருடா
பக். 112, விலை ரூ. 70

**ஒரு வார்த்தையின் பொருள்**
ப்ரஃபுல்லா ராய்
வங்காளத்தில் இருந்து: புவனா நடராஜன்
பக். 224, விலை ரூ. 140

**அண்மைக்காலவங்காளச்சிறுகதைகள்**
தமிழில்: சு. கிருஷ்ணமூர்த்தி
பக். 240, விலை ரூ. 150

**அன்புள்ள பிலாத்துவுக்கு**
பால் சக்கரியா. தமிழில்: திலகவதி
பக். 96, விலை ரூ. 60

**யௌவனத்தின் கடல்**
நவீன மலையாள சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: குளச்சல் மு. யூசுப்
பக். 288, விலை ரூ. 180

**உள்ளுக்குள் ஓடும் ஆறு**
வடகிழக்கு இந்திய சிறுகதைகள்
தேர்வும் மொழிபெயர்ப்பும்: வெ. இன்சுவை
பக். 144, விலை ரூ. 90

**மண்வாசல்**
பிரேம்சந்த்
தமிழில்: ரமேஷ்குமார்
பக். 96, விலை ரூ. 60

**சிறுகதைகள்**
**சித்திரக்கூடம்**
லஷ்மி மணிவண்ணன்
பக். 128, விலை ரூ. 80

**அன்னை தந்த ஒளி**
பெ. தூரன்
பக். 80, விலை ரூ. 50

**அறிஞர் அண்ணா சிறுகதைகள்**
தேர்வும் தொகுப்பும்: திலகவதி
பக். 160, விலை ரூ. 100

**அவள் அதுவானாள்**
பா. விசாலம்
பக். 80, விலை ரூ. 50

**வான்கோவின் காது**
கீதாஞ்சலி
பக். 112, விலை ரூ. 70

**பழைய காலண்டரில் இருதினங்கள்**
பாலு சத்யா
பக். 128, விலை ரூ. 80

**மீண்டெழுதல்**
இல. வின்செண்ட்
பக். 128, விலை ரூ. 80

**வண்ணத்துப் பூச்சிகளும் பெண்களும்**
சூர்யகுமாரன்
பக். 120, விலை ரூ. 75

**நாவல்**
**சுகுண சுந்தரி சரித்திரம்**
வேதநாயகம் பிள்ளை
பக். 112, விலை ரூ. 70
**முள்ளும் மலரும்**
உமா சந்திரன்
பக். 288, விலை ரூ. 180

**டணாயக்கன் கோட்டை**
இ. பாலகிருஷ்ணநாயுடு
பக். 480, விலை ரூ. 300

**அசன்பே சரித்திரம்**
எம்.சி. சித்திலெவ்வை
பக். 128, விலை ரூ. 80

**ஓடும் நதி**
சுப்ரபாரதிமணியன்
பக். 240, விலை ரூ. 150

**சாகசப் பறவைகள்**
எஸ்ஸாரெஸ்
பக். 180, விலை ரூ. 90

**கட்டுரைகள்**
**இந்தியா - மர்மமும் சவாலும்**
இ.எம். பாஸ்டர்
தமிழில்: நா. தர்மராஜன்
பக். 192, விலை ரூ. 120

**உலகை மாற்றிய புத்தகங்கள்**
ராபர்ட் டவுன்ஸ்
பக். 240, விலை ரூ. 150

**ஜெயகாந்தன் சிந்தனைகள்**
தேர்வும் தொகுப்பு: திலகவதி
பக். 112, விலை ரூ. 70

**தமிழகக் கோட்டைகள்**
விட்டல்ராவ்
பக். 240, விலை ரூ. 150

**என் பார்வையில் படைப்பிலக்கியம்**
முருகேச பாண்டியன்
பக். 240, விலை ரூ. 150

**என்றென்றும் வாழும் படைப்புகளும் படைப்பாளர்களும்**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**மூச்சுத் திணறுது பூமி**
மருத்துவர் வி. ஜீவானந்தம்
பக். 120, விலை ரூ. 75

**பெண்ணொன்று கண்டேன்**
பாமரன்
பக். 112, விலை ரூ. 70

**ஆரிய உதடுகள் உன்னது**
பாமரன்
பக். 64, விலை ரூ. 40

**சொல்லப்படாத உலகம்**
யமுனா ராஜேந்திரன்
பக். 96, விலை ரூ. 60

**பாலமாகி நிற்கும் பணி**
யமுனா ராஜேந்திரன்
பக். 160, விலை ரூ. 100

**ஈழத்து அரசியல் நாவல்**
யமுனா ராஜேந்திரன்
பக். 112, விலை ரூ. 70

**திரைப்படங்களான இலக்கியங்களும் நாடகங்களும்**
அறந்தை மணியன்
பக். 128, விலை ரூ. 80

**திரைவெளி**
சுப்ரபாரதிமணியன்
பக். 128, விலை ரூ. 80

**அசோகமித்திரன் 77**
சுப்ரபாரதிமணியன்
பக். 144, விலை ரூ. 90

**நெஞ்சு பொறுக்குதில்லையே**
சாவித்திரி கண்ணன்
பக். 192, விலை ரூ. 120

**கிட்டத்தட்ட கடவுள்**
சி. சரவணகார்த்தியேன்
பக். 154, விலை ரூ. 135

**பாம்பின் கால்த்தடம்**
பிரபு திலக்
பக். 200, விலை ரூ. 125

**பறை**
மருத்துவர் எம். வளர்மதி
பக். 144, விலை ரூ. 90

**தமிழ்ச் சூழலில் அறிவியல் புதினங்கள்**
நெல்லை சு. முத்து
பக். 192, விலை ரூ. 120

**மிக அருகில் மிருகம்**
மருத்துவர் ஆர். கோவிந்தராஜ்
பக். 128, விலை ரூ. 80

**கவிதை**
**விக்ரமாதித்யன் கவிதைகள்**
தேர்வும் தொகுப்பும்: வித்யாஷங்கர்
பக். 560, விலை ரூ. 350

**சொட்டுச் சொட்டாய் விழுகின்றன செவ்வரளிப் பூக்கள்**
என்.டி. ராஜ்குமார்
பக். 80, விலை ரூ. 50

**காதலியர் மேன்மை**
தபசி
பக். 160, விலை ரூ. 100

**திரைக்கதை**
**இம்சை அரசன் 23ஆம் புலிகேசி**
சிம்பு தேவன்
பக். 160, விலை ரூ. 100

**ஆட்டோகிராப்**
சேரன்
பக். 208, விலை ரூ. 130

**நாடகம்**
**முன்மேடை**
அ. ராமசாமி
பக். 144, விலை ரூ. 90

**கள்ளத் தோணி**
எம்.ஏ. அப்பாஸ்
பக். 112, விலை ரூ. 70

**வாழ்க்கை வரலாறு**
**பகவான் மகாவீரர் வாழ்க்கை வரலாறு**
ஏ.எல். நடராஜன்
பக். 240, விலை ரூ. 150

**சுய முன்னேற்றம்**
**வாழ்க்கை வாழ்வதற்கே**
மருத்துவர் திருநாவுக்கரசு
பக். 160, விலை: ரூ. 210

**மனம்**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 112, விலை ரூ. 70

**போதை?**
மருத்துவர் எம். திருநாவுக்கரசு
பக். 160, விலை ரூ. 100

**வெற்றிப்பாதை**
சுரேஷ்குமார்
பக். 128, விலை ரூ. 80

## திலகவதி நூல்கள்

**கல்மரம்**
சாகித்திய அகாதமி விருது பெற்ற நாவல்
பக். 96, விலை ரூ. 60

**உனக்காகவா நான்**
நாவல்
பக். 80, விலை ரூ. 50

**நேசத்துணை**
நாவல்
பக். 128, விலை ரூ. 80

**சொப்பன பூமியில்**
நாவல்
பக். 104, விலை ரூ. 65

**தமிழ்க் கொடியின் காதல்**
நாவல்
பக். 144, விலை ரூ. 90

**மூங்கில் திரை**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**மரப்பாலம்**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

## முத்துக்கள் பத்து
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தீப்பறவையின் கூடு**
சிறுகதைகள்
பக். 186, விலை ரூ. 120

**சக்கர வியூகம்**
சிறுகதைகள்
பக். 96, விலை ரூ. 60

**தொப்புள் கொடி**
சிறுகதைகள்
பக். 200, விலை ரூ. 125

**உங்களுக்காக உலக சினிமா**
கட்டுரைகள்
பக். 360, விலை ரூ. 225

**காலந்தோறும் அறம்**
கட்டுரைகள்
பக். 96, விலை ரூ. 60

**நபி (ஸல்) நமக்குச் சொன்னவை**
கட்டுரைகள்
பக். 120, விலை ரூ. 75

**சேகுவேரா**
வாழ்க்கை வரலாறு
பக். 80, விலை ரூ. 50

**முடிவெடு**
சுய முன்னேற்ற நூல்
பக். 144, விலை ரூ. 90

**இப்படித்தான் வென்றார்கள்**
கேள்வி-பதில்கள்
பக். 208 , விலை ரூ. 130

**காலத்தின் கண்ணாடி**
தொகுப்பு நூல்
பக். 1200, விலை ரூ. 750

**கோடை உமிழும் குரல்**
தொகுப்பு நூல்
பக். 400, விலை ரூ. 250

---

நூல்களை பெற +91 94440 70000 என்ற எண்ணுக்கு அழைக்கவும். அல்லது குறுஞ்செய்தி / வாட்ஸ் அப் செய்தி அனுப்பினால் நாங்கள் தொடர்புகொள்கிறோம். info.amrudha@gmail.com மின்னஞ்சல் முகவரி மூலமாகவும் தொடர்புகொள்ளலாம்.

அம்ருதா சந்தாதாரர்கள் நூல்களை 60% விலை குறைப்பில் பெற்றுக்கொள்ளலாம்.

நூல்களை சென்னை அம்ருதா அலுவலகத்திலும் புத்தகக் காட்சிகளில் அம்ருதா ஸ்டால்களிலும் நேரிலும் பெற்றுக்கொள்ளலாம்.

---

**அம்ருதா, 1 கோவிந்த் ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு, மூன்றாவது பிரதான சாலை, சிஐடி நகர் கிழக்கு, நந்தனம், சென்னை - 600035**

# தொழிற்சங்கம்

விட்டல்ராவ்

**இனாம்கள், ஊழியர்கள் - அடிமட்ட ஊழியரிலிருந்து, உயர் அதிகாரிகள், மந்திரிகள் வரை நீடித்து விரிவடைந்தது. பொதுத்துறைகள், தவிர தனியார் துறைகளிலும் இந்த புற்றுநோய் பாரம்பரியம் தொடர்ந்தது. பொது மக்களுக்கான பொதுச் சேவையென்பது, 'சேவை' மனப்பான்மையை இழக்கத் தொடங்கி, வேறுவித மனப்பான்மைகள் கொண்டதாயிற்று.**

அன்று மே தினம். தொழிற்சங்கக் கொடியேற்றி 'மே தின சூளுரை' நிகழ்த்தி சபதமேற்க, எல்லோரும் மவுண்ட் ரோடு தொலைப்பேசி இணைப்பகத்திற்கு வெளியில் கொடிக் கம்பங்களைப் பார்த்து நின்றிருந்தோம். வருடம் 1964. எனக்கு அதுதான் முதல் மே தின அனுபவம். மே தினத்தன்று இரு கொடிகளை ஏற்றுவார்கள்; இந்திய தேசிய கொடி மற்றும் தொழிற்சங்கக் கொடி. இந்தக் கொடியேற்றத்தின் போது மாநிலத் தலைவர் உரத்த குரலில் முஷ்டியைத் தூக்கி 'மேதின சூளுரைகள்' முழுங்குவார். "சிகாகோவின் வீதியிலே..", எனத் தொடங்கும் அம்முழக்கம்!

நான் பள்ளிக்கூட நாட்கள் சுதந்திரத் தின கொடியேற்றத்துக்குப் பின் இங்குதான் இன்னொரு விதமான கொடியேற்றத்தைப் பார்க்கிறேன். அருகிலிருந்த சக ஊழியர் ஒருவரிடம் மெதுவான குரலில் கேட்டேன்: "கொடியேத்திட்டு மிட்டாய் தருவாங்களா?"



"நான்சென்ஸ்", என்று பல்லைக் கடித்தார் அவர்.

உலகம் முழுக்க மே முதல் தேதியை மே தினமாக தொழிலாளர்கள் கொண்டாடுகிறார்கள். இதற்குப் பின்னால் ஒரு சோக வரலாறு இருக்கிறது. அமெரிக்காவின் சிகாகோ நகரில் 1886-ல் ஒரு தொழிலாளர் போராட்டம் நடந்தது. தொழிலாளர்களை மானாவாரியாக வேலை வாங்கிக் கொண்டிருந்தனர். 12 மணி நேரம், 15 மணி நேரமென்று வேலை செய்ய வேண்டியிருந்தது. சிலரது தலைமையில் தங்கள் உழைப்புக்கான ஒரு நாள் வேலை நேரம் 8 மணியென இருக்கவேண்டுமென்ற கோரிக்கையை முன்வைத்தனர். அன்றைய அரசின் நிர்வாகம் அதை ஏற்க மறுத்ததால், வேலை நிறுத்தப் போராட்டம் 1886-ல் மே மாதம் முதல் தேதியன்று நிகழ்த்தப்பட்டது. இப்போராட்டம் சிகாகோ நகரின் 'ஹே மார்க்கெட்' எனுமிடத்தில் 4-ந்தேதி நடந்தது. நாற்பதாயிரம் தொழிலாளிகள் இப்போராட்டத்தில் பங்கேற்றனர். அரசாங்கம் துப்பாக்கிச் சூடு நடத்தியதில் பலர் காயமுற்றனர். ஏராளமான கைது. அவர்களில் போராட்டத்தைத் தலைமையேற்று நடத்திய ஜார்ஜ் எங்கெல்ஸ் (George Engles), ஆகஸ்டு ஸ்பைஸ் (August Spice), ஆல்பர்ட் பார்சன்ஸ் (Albert Parsons), சாமுவேல் பில்டன் (Samuel Bildon) அடால்ஃப் ஃபிஷர்ஸ் (Adolph Fishers) என்ற ஐவரை 1887-ல் தூக்கிலிட்டுக் கொன்றனர். அன்று தொழிலாளர் நலனுக்காகப்



போராடி உயிர் துறந்த அந்த ஐவரின் தியாக நாளாக மே தினம் உலகெங்கும் கடைபிடிக்கப்படுகிறது. அன்று அவர்களை நினைவு கூறும் வகையில், அந்தந்த தொழிற்சங்கக் கொடிகளை ஏற்றி, தியாகிகளின் பெயரைச் சொல்லி, வீர சபதம் ஏற்கின்றனர். நான் பணியிலிருந்து ஓய்வு பெறும் வரை மே தின கொடியேற்றத்தில் கலந்து கொண்டிருக்கின்றேன்.

1926 தொழிற்சங்க சட்டப்படி ‘தொழிற்சங்கம்’ என்று சொல்லப்படுவதில், தொழிலாளர்களையும் தொழிலதிபர்கள் அல்லது வேலை வாய்ப்பை தந்தவர்களையும் உள்ளிட்டது என அறியப்படுகிறது. எப்படியும் தொழிற்சங்கமென்பது முக்கியமாய் தொழிலாளர்களின் அமைப்புதான். முதலாளிகள் அல்லது தொழிலதிபர்கள் அல்லது அரசாங்கம் (வேலை வாய்ப்பு அளிப்பவர்கள்) எனும் நிறுவனத்தோடு, ஊழியர் தனித்தனியாக நின்று, எவ்வித பிரச்சினைக்கும் அணுகி, வாதாடி பேரம் பேசுவதென்பது ஆகாத காரியமாதலால், தொழிலாளர்கள் / ஊழியர்களின் ஒன்றுபட்ட கூட்டு நடவடிக்கை மூலம்தான் சாத்தியம் என்பதால், அவ்வித அந்த ஒன்றுபட்ட கூட்டு அமைப்புதான் தொழிற்சங்கம்.

தொழிற்சங்க செயல்பாடு என்பது அன்றைக்கு தொலைப்பேசியும் தந்தியும் தபால்துறையும் இணைந்திருந்த தபால் தந்தி இலாகாவில் புதியதல்ல. மே மாதம் 25-ந்தேதியிட்ட 1940-ம் வருடத்து ‘இந்து’ ஆங்கில தினசரியில், அன்றைய நாளில் நடந்த தபால் தந்தி ஊழியர் தொழிற்சங்கக் கூட்டம் ஒன்றைப் பற்றிய செய்தி, இதைச் சொல்லுகிறது. சொல்லும்போது அது இந்தியத் தபால் தந்தி தொழிற்சங்கத்தின் நான்காம் ஆண்டு பொதுக்குழுக் கூட்டம் என்று குறிப்பிடுகிறது. இக்கூட்டம் 1940-ல்

மே மாதம் 27ந்தேதி மாடர்ன் கஃபேயில் மாலை, அந்நாள் எம்.எல்.ஏ. திரு சுவாமி வெங்கடாசலம் செட்டியவர்கள் தலைமையில் நடைபெற்றதாக அறிய வருகிறோம். ஊழியர்கள் அனைவருக்கும் தீர்மானம் முன் வைக்கப்பட்டது குறிப்பிடத் தக்கது.

சென்னைத் தொலைப்பேசியின் தொழிலாளர் / ஊழியருக்கான தொழிற்சங்கம் 1951-ல் தோன்றியது. தொழிற்சங்கம் 1952-ல் தன் ஊழியருக்கான செய்தி இதழ், 'Telephone Buzz என்பதை வெளியிட்டது.

தொலைப்பேசி துறையின் பலம் பொருந்திய தொழிற்சங்கமாக 'NFPTE' நீண்ட காலமாயிருந்து வந்தது. அதிலிருந்து 1970-ல் FNPTO என்று வேறொரு புதிய சங்கம் உதித்து வளர்ந்தது. தேசிய தொலைத்தொடர்புச் சங்கத்தின் (NFPTE) அகில இந்திய பொதுச் செயலாளராய் தம் இறுதி காலம் வரை அப்பதவியிலிருந்தவர், திரு. ஓம்.பிரகாஷ் குப்தா. இவரது ஆசிரியர் பொறுப்பில் மாதந்தோறும் அதி சிறப்பாக வெளிவந்து கொண்டிருந்த ஆங்கில சங்கப் பத்திரிகை 'TELECOM'; மற்றொரு சங்க இதழ், PCST LABOUR! சென்னைத் தொலைப்பேசியின் மாநில வட்டச் செயலாளராக திறமையோடு பணியாற்றிப் புகழ்பெற்றவர் பி. சீனுவாசராவ். வலிமை மிக்க இச்சங்கம் அப்போதுதான் இடது வலதாக பிளவுண்ட இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் வலது அணியைச் சார்ந்திருந்தது. சற்று தீவிர போக்கைப் பின்பற்றிய இடதுசாரியைச் சார்ந்தவர்கள் NFPTE-க்குள் இருந்தாலும் எதிர்ப்பாளர்களாய் அறியப்பட்டிருந்தனர். முக்கியமாய் நிர்வாகப் பிரிவின் தலைமைப் பொறுப்பிலிருந்த திரு சந்திரசேகரன் அவர்களும் தொலைப்பேசி பொறியியல் பிரிவில் ஃபோன் இன்ஸ்பெக்டராயிருந்த திரு. ஏ.கே. வீரராகவனும் இடது சாரி அணியிலிருந்தவர்கள்.

தொலைப்பேசித் தொழிற்சங்கத்தில், தமிழகத்தில், மறக்க முடியாத தலைவர்கள் தோழர் ஞானய்யா, பிரேமநாதன், முத்தியாலு, சந்திரசேகரன், ஏ.கே. வீரராகவன், சீனுவாசராவ் பாண்டுரங்கன், ஏ.டி. ருக்குமணி, அப்துல் மஜீத், ஜே, ரங்கநான் மற்றும் ஜெகன். திரு. ஜெகன் மிகவும் குறிப்பிடக்கூடிய தலைவர். இடது, வலது இரு அணிகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டவர். நாவன்மையோடு எழுத்து வன்மையும் உடையவர். தமிழகத்தின் தொலைப்பேசித் தொழிலாளருக்கென தமிழிலில், 'ஒலிக் கதிர்' எனும் சிறப்பான மாத இதழ் தோழர் ஜெகன் அவர்களின் ஆசிரியர் பொறுப்பில் வெளிவந்து கொண்டிருந்தது. இப்போது ஜெகன் அவர்களின் ஆசிரியர் பொறுப்பில் வெளிவந்துகொண்டிருந்தது. இப்போது ஜெகன் இல்லாதது போலவே ஒளிக்கதிரும் இல்லை.

1968-ல் அகில இந்தியத் தொலைத்தொடர்பு ஊழியர்களின் மகத்தான ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் (Oneday Token Strike) நிகழ்ந்தது.. இந்த ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் மறக்க முடியாத நிகழ்வும் அனுபவமுமாகும்.

வேலை நிறுத்த நாளுக்கு இரண்டல்லது மூன்று தினங்கள் முன்பிருந்தே தவறாது ஒவ்வொரு நாளும் தவறாது இருமுறை வாசல் கூட்டம் (Gate Meeting) நடைபெற்று வந்தது. கேட்மீட்டிங்கு போடுவதற்கும் யூனியன் கிளைச்சங்கக் கூட்டத்துக்கும் அனுமதி கேட்டுப் பெற்றாகவேண்டும். பொதுவாக வாசல் கூட்டத்துக்கான அனுமதியைக் கேட்டுப் பெறும் சந்திப்பில் அதிகாரியுடன் பேசப்போன நால்வரில் நானும் ஒருவனாயிருப்பேன். ஒவ்வொரு சந்திப்பின்போதும் இணைப்பக அதிகாரிகளுக்கு இவ்வித சந்திப்பும் பேச்சும் கசப்பாவும் முகஞ் சுளிப்புமாயிருக்கும். எதோ பயங்கர பிரச்சினை தடிக்கு வந்துவிட்டது போல நெற்றியில் கைவைத்துத் தேய்த்தபடியும் கண்ணாடியைக் கழட்டுவதும் போடுவதுமாயிருப்பார். ஒரு வழியாகக் கிளைச் செயலாளரைப் பார்த்துக் கேட்பார்..

"எத்தனை மணிக்கு?"

நாங்கள் எழுத்து மூலமாய் வேண்டி, அவர் மேடையில் அவர் முன்பாக வைத்த கடிதத்தைச் சுட்டிக் காட்டுவோம். சமாளித்துக் கொண்டு அதில் பார்வை செலுத்துவார்.

"அத்தனை பேரையுமா கேட்மீட்டிங்குக்கு வரச் சொல்லுவீங்க?" என்று தெரியாதது போல கேட்டுக்கொள்ளுவார்.

"எங்களுக்கும் டூட்டி முக்கியம் சார், வாடிக்கையாளருக்கு ஆனமட்டில் இடைஞ்சல் வைக்கக் கூடாதுனு, ஒவ்வொரு செக்ஷன்லயும் ரெண்டு ரெண்டு பேரை இருக்க வச்சிட்டு மத்தவங்களை மீட்டிங்குக்கு வரச் சொல்லுவோம்", என்பார் செயலர்.

அனுமதி கடிதத்தை அதிகாரபூர்வமாக வாங்கிக்கொண்டு அடுத்த நடவடிக்கையில் இறங்கினோம். ஏராளமான பிரச்சினைகள், கோரிக்கைகள் நிலுவையில் தேங்கி அரசாங்கத்திடம் அடைகாக்கப்பட்டு வந்ததே தவிர தீர்வு காணப்படாது. மேலும் மேலும் புதிய கோரிக்கைகள் சேரத் தொடங்கியிருந்த சமயம்தான் அவற்றை முன் வைத்து ஒரு நாள் அடையாள வேலைநிறுத்தம் ஏற்படுத்தி அரசுக்கு எச்சரிக்கை தர தொழிற்சங்கம் முடிவெடுத்தது. வேலை நிறுத்த நாளுக்கு முன் தினம், மவுண்ட் ரோடு, தொலைப்பேசி இணைப்பகத்துக்கு அருகிலிருந்த எனது அறையில் ஒரு கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டு, மாநில வட்டச் செயலாளர் தோழர் சீனுவாசராவ் தலைமையில் நடந்தது. மறுநாள் ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் எவ்வளவுக்கு வெற்றிகரமாய் நடத்தி முடிக்கப்பட வேண்டும் என்ற முக்கிய வழிகாட்டல்களையும் அவர் ஊழியர்களுக்கு விளக்கினார். என் அறையும் வெளியில் ஆளோடியும் அறுபதுக்குச் குறையாத உறுப்பினர்களைக் கொண்டதாய் நிறைந்திருந்தது.

என் அறைக்குக் கீழே வெளியில், பெரிய மோட்டார் கார் உதிரிப்பாகங்களை பழையன வாங்கி சீராக்கி விற்கும் முஸ்லீம் ஒருவரின் காயலாங்கடை இருந்தது. புதுப்பேட்டைப் பகுதியில் இம்மாதிரி காயலாங்கடைகள் அதிகமிருந்தன. இரவானால் எங்கெங்கிருந்தோ நாங்கள் ஏலத்தில் எடுத்த, விலைக்கு வாங்கிய (திருட்டு சரக்கும்

**வேலை செய்யச் சம்மதித்து இணைப்பகத்துக்குள் நுழைந்து விடுவார்கள். இவர்களுக்கு அரசு தகுந்த பாதுகாப்பையும் பிற வசதிகளையும் ஏற்பாடு செய்து தரும். இன்று காலை முதல் வேலை நிறுத்தம் என்றால், இவர்கள், முதல் நாள் இரவே அலுவலகம் - இணைப்பகத்துள் வந்து சேர்ந்துவிட அனுமதிக்கப்படுவார்கள்.**

உள்ளிட்டது) பழைய மோட்டார் பாகங்களை அக்கு வெறு ஆணி வேறாகப் பிரிப்பார்கள். பிரிப்பதென்பது, போட்டு அடியடியென்று அடித்து உடைத்தெடுப்பார்கள். பல இரவுகள் எங்களுக்குத் தூக்கம் போடுவார்கள். அவர்களுக்குத் தொலைப்பேசி முக்கியம். காயலாங்கடைகளின் வியாபாரத்துக்கு அவசியமான தொலைப்பேசிகள் நல்லவிதமாய் இயங்கும் நிலையிலிருக்குமாறு பார்த்துக் கொள்ளுவதில் எங்கள் நட்புறவு அவர்களுக்கு மிகவும் வேண்டியிருந்தது. எனவே, எங்கள் நண்பர்களிடமிருந்து வரும் தொலைப்பேசி அழைப்புகளுக்கு அந்தக் கடையின் எண்ணைக் கொடுத்திருப்போம், என்னை நிறைய பேர் கடை எண்ணில் அழைப்பார்கள். கடை சாயபு மனம் கோணாது கூப்பிட்டுப் பேசத் தருவார். எங்களை ஒருநாள் வேலை நிறுத்தத்தில் மிகுந்த அக்கறையும் ஆதரவும் காட்டுவதாய் நடந்துகொண்டார். கூடவே இதையும் கேட்டுக்கொண்டார். "ஒருநாள் தானே சார், அதுக்கப்புறமும் தொடருமா?" என்று, என் அறையில் நடந்த கூட்டத்தில் கலந்துகொண்ட அறுபது பேருக்கும் தேநீர் - பிஸ்கட் வரவழைத்துத் தந்த உபய காரியத்தை இரு காயலான்கடைக்காரர்கள் மனமுவந்து ஏற்றுக்கொண்டார்கள். இது போன்ற நட்புறவுகளும் கவனிப்புகளும் அன்பளிப்புகளும் தாமாகவே மனமுவந்து முன்வந்து, செய்து வந்த காரியங்களும் போகப் போக, 'இனாம்'களாக மாறின. இனாம்கள் எதிர்பார்க்கப்படுவதும் அதையறிந்து இனாமளிப்பதும் வழக்கமாகி, இனாம் கேட்பதென்பது வழக்கமாயிற்று, இந்த இனாம்கள், ஊழியர்கள் - அடிமட்ட ஊழியரிலிருந்து, உயர் அதிகாரிகள், மந்திரிகள் வரை நீடித்து விரிவடைந்தது. பொதுத்துறைகள், தவிர தனியார் துறைகளிலும் இந்த புற்றுநோய் பாரம்பரியம் தொடர்ந்தது. பொது மக்களுக்கான பொதுச் சேவையென்பது, 'சேவை' மனப்பான்மையை இழக்கத் தொடங்கி, வேறுவித மனப்பான்மைகள் கொண்டதாயிற்று.

மறுநாள் நாடெங்கும் தொலைத்தொடர்பு ஊழியர்கள் நாடு தழுவிய ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் தொடங்கிற்று. எல்லோரும் எங்கும் போய்விடாமல் வீட்டிலோ அறைகளிலோ இருக்குமாறு சங்க மேலிடம் சொல்லியிருந்தது. போலீஸ் குவிக்கப்-பட்டிருந்தது ஒவ்வொரு தொலைப்பேசி இணைப்பகத்துக்கு வெளியிலும் போலீஸ் காவல் போடப்பட்டிருந்தது. தொழிற்சங்கத்தில் அதிருப்தி கொண்டவர்கள் கொஞ்சம் பேர் என்றைக்கும் இருப்பார்கள். ஆரம்பத்தில் இவர்கள் உறுப்பினராயிருந்திருப்பார்கள். இவர்களுக்குத் தொழிற்சங்க சேவையென்பது முழுக்கவே 'ஓசி'யில் கிடைக்காதா என்று எண்ணம். சங்கத்துக்கான மாதச்சந்தா தருவதற்கு நாளைக்கு நாளைக்கென்று வாய்தா வைப்பார்கள். இவர்கள் பேரில் சந்தா மூன்று நான்கு மாதங்களாய் நிலுவையில் சேர்ந்து நிற்கும். அதைத் தவணையில் தருவார்கள். ஒவ்வொரு கிளைக் கூட்டத்திலும் அனாவசிய கேள்விகளைச் சிலர் எழுப்புவார்கள். கடுமையாக யூனியனை விமர்சிப்பார்கள். வெளிநடப்பு செய்யும் கலாச்சாரம் இங்கும் நிகழ்ந்ததுண்டு. கடைசியில் யூனியனைவிட்டே விலகுவார்கள். அவர்கள் ஒரு பக்கம் என்றால், வேலை நிறுத்தத்துக்குக் கண்டனம் தெரிவித்து, அதில் பங்கேற்போருக்குக் கடுமையான தண்டனை நடவடிக்கை எடுக்கப்படும் என்று வந்த அரசின் சுற்றறிக்கையைக் கண்டு பயந்தவர்கள் மற்றொரு பக்கமாய் வேலை செய்யச் சம்மதித்து இணைப்பகத்துக்குள் நுழைந்து விடுவார்கள். இவர்களுக்கு அரசு தகுந்த பாதுகாப்பையும் பிற வசதிகளையும் ஏற்பாடு செய்து தரும். இன்று காலை முதல் வேலை நிறுத்தம் என்றால், இவர்கள், முதல் நாள் இரவே அலுவலகம் - இணைப்பகத்துள் வந்து சேர்ந்துவிட அனுமதிக்கப்படுவார்கள். மறுநாள் இவர்களுக்குக் காலையில் சிற்றுண்டி காபி, மதியவுணவு என்று இலாகா ஏற்பாடு செய்து தரும். ஒரு சமயம், எழுபதுகளில், பாரத் பந்த் நடந்தபோது, இப்படித்தான் ஊழியர்கள். முதல் நாள் இரவே போயிருக்கச் செய்த இலாகா, மறுநாள் காலையில் ரொட்டி - வெண்ணெய் - ஜாம் வினியோகித்தது. இணைப்பக உயர் அதிகாரியே வந்திருந்து தம் கையால் ரொட்டியில் வெண்ணெய் தடவி எல்லோருக்கும் தந்தார். இது இயன்றளவுள்ள ஓர் அரசியல் கலாச்சாரம். தீவிரமான சிலர், பொதுத் தொலைப்பேசி கூண்டுக்குள் நுழைந்து எக்ஸ்சேஞ்சு எண்ணைச் சுழற்றி உள்ளே வேலை செய்யும் கருப்பு ஆடுகளை அழைத்து வண்டை வண்டையாகத் திட்டுவதுண்டு.

மவுண்ட் ரோடு இணைப்பகம், அதன் உள் மற்றும் வெளிப்புறப் பகுதி பணியாளர்களும் மைலாப்பூர் (மந்தைவெளி, அடையாறு, கோட்டூர்புரம், திருவான்மியூர் வரை உள்ளிட்டது) கோட்டப் பிரிவும் 68-ல் ஒரே டிவிஷனல் எஞ்சினீயரின் கீழிருந்தது. ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் முடிந்ததும் அரசு தரப்பில் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட ஊழியர்களுக்குக் குறைந்தபட்ச தண்டனையாகவாவது ஏதாவது தந்தாக வேண்டுமென்று மைலாப்பூர் பகுதியின் அனைத்துவித பணியாளர்களையும் மவுண்ட் ரோடு பகுதிக்கு மாற்றி, மவுண்ட்ரோடு ஊழியர்கள் அனைவரையும் மலைப்பூர் பகுதிக்கு மாற்றியது. சில அசௌகரியங்கள் ஏற்பட்டதென்றாலும் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்ளப்பட்டது.

(தொடரும்)

# ஜனநாயகப் பொய் மாளிகை

இந்திரா பார்த்தசாரதி

இந்தியா குடியரசு நாடாக அறிவிக்கப்பட்டு நடந்த முதல் தேர்தல், 1952. நான் திருச்சி, தேசியக் கல்லூரியில் தமிழ்த்துறையில் சேர்ந்து ஒரு வாரம் ஆகியிருந்தது. தேர்தல் பணிக்கு நான் லால்குடி போக வேண்டுமென்றார்கள். மூன்று நாட்கள் பயிற்சி. அப்பொழுது என் வயது 22.

அந்தக் காலத்தில் இப்பொழுது இருப்பதுபோல் அடையாளச் சீட்டு என்று எதுவும் கிடையாது. வாக்களிக்கின்றவர்கள் தங்கள் பெயர்களைச் சொல்ல வேண்டும். நினைவு இருந்தால் பிறந்த தேதி / வயதை அறிவிக்க வேண்டும். ஆணாக இருந்தால் தந்தை பெயர், திருமணமாகியிருந்த பெண்ணாக இருந்தால் கணவன் பெயர் ஆகியவற்றைத் தெரிவிக்க வேண்டும்.

இங்குதான் சிக்கல். கிராமங்களிலிருந்த வந்த பெரும்பான்மையான வயதான பெண்கள் தங்கள் கணவன் பெயரைச் சொல்ல மாட்டார்கள்.

ஒரு சுவாரஸ்யமான அனுபவம். கணவன் பெயரைக் கேட்டதும் ஒரு பெண் தலையிலிருந்து ஒரு பூவை எடுத்துக் காண்பித்தாள்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. "பூவா உங்க புருஷன் பெயர்?" என்றேன்.

அபிநயம் செய்வது போல் இரண்டு கைகளையும் அகல விரித்துக் காண்பித்தாள். அதுவும் எனக்குப் புரியவில்லை.

எனக்கு உதவி செய்ய வந்திருந்த வயதான கிராமப் பள்ளிப் பணியாளர் சொன்னார்: "அவர் பெயர் பூங்காவனம்."

அந்த மூதாட்டியின் முகம் சிவந்தது புன்னகையுடன் தலையாட்டினார். கணவன் இறந்து பத்து ஆண்டுகள் ஆகி யிருந்தன.

ஆனால், அந்தக் கால கட்டத்தில், போலி வாக்குகள், ஆள் மாறாட்டம், வாக்குச்சாவடிகளைக்கைப்பற்றுதல் ஆகிய இக்கால 'ஜனநாயகத்திருப்பணிகள்' எதுவும் நடை பெற்றதாகத் தெரியவில்லை. மக்கள் அரசாங்கத்தை நம்பினார்கள்; அரசாங்கம் மக்களை நம்பியது.

எழுபது ஆண்டுகளில், நம் 'ஜனநாயகம்' எந்த அளவுக்கு வளர்ச்சி பெற்றிருக்கிறது என்பதை இப்பொழுது நடக்கும் தேர்தல்களைப் பார்த்தால் போதும். ஒரு கட்சி வேட்பாளர் அவர் கட்சித் தலைவரை ஏற்றுக்கொள்ளாதவர்களைப் பாகிஸ்தானுக்குப் போகச் சொல்லுகிறார். மாற்றுக் கட்சிக்காரர், அந்தக் குறிப்பிட்ட கட்சித் தலைவரைச் சின்னா பின்னமாக ஆக்கிவிடுவேன் என்று சூளுரைக்கிறார்.

'ஆயிரமுண்டு இங்கு ஜாதி' என்று சொன்ன மகாகவியின் வாக்கு பொய்க்கக்கூடாது என்பதற்காக வாக்கு வங்கிகளுக்காக ஜாதி அடிப்படையில் வேட்பாளர்களை நாடெங்கும் நிறுத்தி ஜனநாயகத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறோம். உச்ச நீதிமன்றம் ஆணையிட்டால் என்ன? ஜாதியையும் மதத்தையும் கோஷங்களாக ஆக்க வழியா இல்லை?

ஜாதி அடையாளத்தை மட்டும் காப்பாற்றினால் போதுமா? மத அடையாளத்தைக் காப்பாற்ற வேண்டாமா? "நீங்கள் இருக்கும் பகுதியில் வேற்று மதத்தினருக்கு இடம் கொடுக்காதீர்கள். அப்படி அவர்கள் அங்கு இருந்தால் அடித்து விரட்டுங்கள்" என்கிறார் ஒரு கட்சித் தலைவர்.

முன்பு போல் இல்லாமல், முதல் தடவையாக ஒரு கட்சி, அது பதவிக்கு வந்தால், முதலமைச்சராக இருக்கப் போகிறவர் யார் என்று அறிவிப்பது வழக்கமாகிவிட்டது. அந்தத் தலைவரும் அவர் கட்சி பெரும்பான்மைப் பெறுவதற்காக நாடெங்கும் சூறாவளிப் பயணம் மேற்கொண்டு பாரதப் புண்ணிய பூமியை ஐந்தாறு தடவையாவது வலம் வந்து விடுவார். மாற்றுக் கட்சியினர் இதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பார்களா? அவர்களும் ஒரு நாளைக்கு இரண்டு பொதுக் கூட்டம் என்று நாடெங்கும் ஊர்தோறும் பட்டி தொட்டிகள் என்று சுற்றி 'ஜனநாயகத்தை'க் காப்பாற்றிக் கொண்டு வருகிறார்கள்.



இதுவரை நம் நாட்டுத் தலைவர்கள் தங்கள் ஓயாத பொய் சுமக்கும் பேச்சுக்கள் மூலம் விரயமாக்கியிருக்கும் சக்தியை வைத்துக்கொண்டு நம் நாட்டின் மின்சார பற்றாக்குறையை ஈடு செத்திருக்க முடியும் என்று தோன்றுகிறது.

ஹாம்லெட் சலிப்படைந்து 'Words, Words, Words' என்று சொல்வது போல் பாரத நாட்டு மக்கள் சொல்வதும் என் காதில் கேட்கிறது. ●

**இந்திரா பார்த்தசாரதி** <parthasarathyindira@gmail.com>

**published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116. Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.**
**Editor : PRABHU THILAAK**

